# கல்கி



கை நழுவிப் போகிறதா கட்சி?

KALKI 21.7.96 ரூ. 3.00

# மேனகா காந்தி சிறப்புப் பேட்டி!



விதிகளை மீறும் போக்குவரத்து!

—கமிஷனருடன் ஒரு நேரடி விசிட்!

# வந்தது போனஸ்

US 64

பாதுகாப்பு,
எளிதில் ரொக்கம், லாபம்
மற்றும் பலப்பல

**முதல் முறையாக**
**பரிசு**
## 10% போனஸ்
## யூனிட்டுகள்

**உறுதியான**
## 20% டிவிடெண்டுடன்
**கூடவே**

நீங்கள் யூஎஸ்-64ல் முதலீடு செய்திருந்தால், உங்களுக்கு இன்னுமொரு வெற்றி. யூஎஸ்-64 சரித்திரத்திலேயே முதல் முறையாக பரிசாக 10% போனஸ் யூனிட்டுகள். 1:10 போனஸ் அளிப்பு இலவசமாக, அதாவது உங்களிடமிருக்கும் 10 யூனிட்டுகளுக்கு 1 யூனிட் போனஸாக கிடைக்கிறது. இத்துடன் 1995-96 வருடத்திற்காக உங்களுக்கு கிடைக்கும். உறுதியான 20% டிவிடெண்டும் உண்டு.

**விசேஷ ஜூலை விலை ரூ. 14.00 20 ஜூலை வரை மட்டும்.**

யூஎஸ்-64 யூனிட்டுகள் என்றும் பாதுகாப்பு, எளிதில் ரொக்கம் மற்றும் லாபத்தை அளிக்கிறது. ஆகவேதான் 2 கோடி மக்கள் சேர்ந்து இது அவர்களின் வாழ்க்கையின் முக்கிய அங்கமாகி உள்ளது. இன்றும் என்றும் என்றென்றும்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
*உங்கள் மேலான எதிர்காலத்திற்கென*

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர், போன்: 214973 • சென்னை, போன்: 517101, 517190
• மதுரை, போன்: 38186 • திருச்சி, போன்: 760060.

SISTA SAATCHI & SAATCHI-0093/96 M TM B

# அதிர்ச்சி தரப்போகிறார் ஆன்!

பேச்சும் மூச்சும் மட்டுமல்லாமல், இருமுவதும், தும்முவதும் கூட தமிழில்தான் இருக்க வேண்டும் என்று அடம் பிடித்துக் கொண்டிருக்கும் அமைச்சர் தமிழ்க் குடிமகனுக்கு, சட்டமன்றத்தில் விரைவில் ஒரு அதிர்ச்சி காத்திருக்கிறது. உறுப்பினர் ஒருவர் முழுக்க முழுக்க ஆங்





கிலத்திலேயே உரை நிகழ்த்தப் போகிறார். அவர்? சமீபத்தில் தமிழக அரசால் சட்டமன்ற உறுப்பினராக நியமிக்கப்பட்ட திருமதி ஆன் (Anne).

பாராளுமன்றத்திலும், சட்டமன்றத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைத் தவிர, விரல்விட்டு எண்ணக்கூடிய அளவுக்கு நியமன உறுப்பினர்களும் இருக்கிறார்கள். சிறுபான்மை சமூகங்கள், ஜனநாயகத்தில் சரியான முறையில் பிரதிநிதித்துவம் பெற வேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட ஏற்பாடு இது. அந்த வகையில் ஆங்கிலோ-இந்திய சமூகத்தின் சார்பாக தமிழக சட்டமன்ற நியமன உறுப்பினராக்கப்பட்டிருக்கிறார் திருமதி ஆன்.

"இந்த நியமன உறுப்பினர் பதவிக்கு எங்கள் சமூகத்தில் இருந்து பத்துப் பேர் விண்ணப்பித்து இருந்தார்கள். முதல்வர் அவர்கள் ஒரு மாதத்திற்கு முன் என்னை அழைத்து விசாரித்தார். நானும் அப்பாவும் போயிருந்தோம். எனக்கு இந்தப் பதவி கிடைப்பதற்கு பேராயர் எஸ்றா. சற்குணம், மதுரை பேராயர் ஆரோக்கியசாமி, சென்ற முறை நியமன உறுப்பினராக இருந்த டிசௌசா ஆகியோர் செய்த பரிந்துரைகளும் காரணம். தவிர அப்பாவை



• டிமான்டி

லைவருக்கு நன்றாகத் தெரியும்'' என்று சொன்னார் ஆன்.

அப்பா? டி.வி. டிமான்டி. சட்ட மேலவையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராக இருந்தவர்.

மேடவாக்கம் டேங்க் பண்ட் சாலையிலுள்ள ஆன் வீடு விசாலமானது. வரவேற்பறையில் கொஞ்சம் வித்தியாசமான பெயின்டிங்குகள். மெல்லிய திரைச்சீலைகள் ஓர் ஓரத்தில் பியானோ.

"நான் பிறந்தது சென்னையில்தான். பெற்றோருக்கு மூத்த பெண். பள்ளிப் படிப்பு ஏற்காட்டில். பின்னர் ஸ்டெல்லாவில் பி.ஏ. அப்புறம் கனடாவிற்குச் சென்று பெயின்டிங்கில் ஒரு crash course. தமிழ் புரிந்துகொள்வேன். ஆனால் பேச்சுத் தமிழ் சுத்தமாக வராது. அசெம்பளியில் ஆங்கிலத்தில்தான் பேச வேண்டும்" என்று சொல்கிறார் ஆன்.

அப்பா டிமான்டி மேலவை உறுப்பினராக இருந்த போது (1974-80) அவருக்கு உதவியாகத் தான் செயல்பட்ட அனுபவம் இப்போது கை கொடுக்கும் என்று நம்புகிறார் ஆன். கணவர் பிரகன்னா சொந்தமாகத் தொழில் செய்கிறார். மகனும், மகளும் ஏற்காட்டில் படிக்கிறார்கள்.

"ஆங்கிலோ இந்தியர்கள் இந்தியா முழுக்க அதிக பட்சமாக மூன்று லட்சம் பேர் இருக்கிறார்கள். தமிழகத்தில் சுமாராக 35 ஆயிரம் பேர் இருக்கிறார்கள். படிப்பு, வேலை வாய்ப்பு போன்றவற்றில் மற்றவர்களுடன் போட்டியிட முடியாமல் பின் தங்கியிருக்கிறார்கள். நான்தான் அவர்களுக்கு ஆங்கிலோ இந்தியப் பள்ளிகளில் இலவசப் பள்ளிப் படிப்புக்கு வழி செய்து கொடுத்தேன். எங்களைப் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்க வேண்டும். ரொம்பவும் பிரஸ்டீஜ் பார்த்துக் கொண்டு இருந்ததால், அரசுடனும் போராடாமல், மற்றவர்களுடனும் போட்டி போட முடியாத நிலையில், ஆங்கிலோ இந்தியர்கள் தங்களின் முகத்தைத் தொலைத்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்கிறார் டிமான்டி.

ராஜாஜி, காமராஜ் ஆகியோருடன் நெருங்கிப் பழகியவர் இவர். இன்றைக்கும் தனிப்பட்ட முறையில் வறுமையில் வாடும் ஏராளமான ஆங்கிலோ- இந்தியர்களுக்கு நிதியுதவி செய்து வருகிறார். அவர்களுடைய குழந்தைகளின் பள்ளிப் படிப்புக்கு உதவுகிறார்.

அப்பாவுடனேயே வசிக்கும் ஆன், ஆங்கிலோ-இந்தியர்களின் பிரச்னையை நன்கு புரிந்து கொண்டிருக்கிறார். "ஸ்கூல் லெவலுக்கு மேல் போவது அபூர்வமாகி வருகிறது. படிப்பு, வேலைவாய்ப்பு தவிர வீடு பிரச்னை வேறு உள்ளது. அவர்களுடைய நிலைமையை அரசின் கவனத்துக்குக் கொண்டு வருவேன். அதிர்ஷ்டவசமாக பிரச்னைகளைக் காது கொடுத்துக் கேட்கும் முதல்வர் இப்போது இருக்கிறார்" என்கிறார் ஆன்.

தடகளம், மற்றும் ஹாக்கியில் பல பரிசுகளைப் பெற்றிருக்கிறார் ஆன். ஹாக்கியில் தமிழ்நாட்டிற்காகவும் விளையாடி இருக்கிறார். தவிர, "நான் வரையும் ஒவ்வொரு பெயின்டிங்கும் நன்கு விற்பனையாகிக் கொண்டிருக்கிறது!"என்கிறார்.

பெண்களுக்கான ஆடைகள் தயாரித்து வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்யும் தொழிலையும் செய்கிறார். "இதற்கெல்லாம் செலவழித்தது போக நேரம் இருந்தால் இதை வாசிப்பேன்!" என்று பியானோவைக் காட்டுகிறார்.

"எங்கள் சமூகத்தின் செயல்பாடுகள் வெளிப்படையாகவே இருக்கும். 99 சதவீதம் காதல் கல்யாணம்தான். ஆங்கிலோ இந்தியர்கள் ரொம்பவும் மென்மையானவர்கள். தான் உண்டு தன் வேலையுண்டு என்றிருப்பார்கள். பொருளாதார வசதியில்லாவிட்டாலும் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொண்டு, விருந்தினர்களை நன்கு கவனிக்கும் குணமுடையவர்கள்'' என்கிறார் ஆன்.

பாராளுமன்றத்தில் ஆங்கிலோ- இந்திய நியமன உறுப்பினராகும் வாய்ப்பு அப்பாவுக்கு இருப்பதாக கொசுறுத் தகவலையும் சொன்னார் ஆன்.

- ஸ்ரீநிவாசன்

வண்ணப்படங்கள் : பேஜர் கே. மூர்த்தி.



''மத்திய அரசு மாதிரியே, என் அம்மாவுக்கும் என் மனைவிக்குமிடையே குறைந்த பட்ச பொதுத்திட்டம் இருக்கிறதால் தான் குடும்பம் 'ஸ்மூத்'தாக ஓடிக் கிட்டிருக்கு!''

''அந்த குறைந்தபட்ச திட்டம் என்ன?''

''நானும் எங்கப்பாவும் ஆபீசுக்குப் போனப்புறம் எங்களைப் பத்தி மாத்தி மாத்தி குறை கூறி சந்தோஷப்படுவதுதான்!''

- ஆர். ரகோத்தமன்




"சட்டத்தை மீறினது யாராயிருந்தாலும் அவர் தகுந்த தண்டனை பெறுவார்னு கொலை யுண்டவருடைய குடும்பத்தார்கிட்டே முதல்ல சொல்லுங்க; அப்புறம் கொலையாளியைத் தப்பிக்க விட்டுடுங்க..."




"அஜெண்டாவைத் தூக்கி அந்தாண்ட வையுங்க! எப்பவும் போல, பி.ஜே.பி பிரபலமாயி டாம இருக்கிறதுக்கு என்னவெல்லாம் செய் யணும்ங்கறதைப் பற்றிப் பேசுவோம்."

# ஆஹ்..ஹாஹாஹா...

"அடுத்த தலைமுறை இளைஞர்களுக்கு நாம ஒரு பிரகாசமான எதிர்காலத்தை உரு வாக்கிக் கிட்டிருக்கோம். நாம விட்டுட்டுப் போகிற பிரும்மாண்டமான கடன் தொகையை அடைக்கிறதுக்காக வரலாறு காணாத வகையில உழைக்க அவங்களுக்கு ஒரு வாய்ப்புத் தரோமே..."






"இன்றைக்கு ஊழல் இவ்வளவு தூரம் அதிகமாகியிருக்கறதுக்குப் பத்திரிகைகள்தான் காரணம்! அரசியல் தலைவர்களின் ஊழல்களை அவை அம்பலப்படுத்துவதினாலே அதைப் படிக்கிற அத்தனை பேருக்கும் அதே போல துட்டடிக்கணும்னு ஆசை வருது...."

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

# - கமிஷனரோடு ஒரு நேரடி விசிட்!




* அடையாறு சிக்னல் : முறையிடுகிறார் சுந்தரம்




* தாறுமாறாகக் கடக்கும் பாதசாரிகள்

சென்னையிலுள்ள வாகன ஓட்டிகளும் சரி, பாதசாரிகளும் சரி, போக்குவரத்து விதிகளை எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கிறார்கள்? அவர்களிடம் போக்குவரத்துப் போலீஸார் எப்படி நடந்து கொள்கிறார்கள்? சென்னை நகர அடிஷனல் போலீஸ் கமிஷனர் ஆ.ஐ. இரவி. ஆறுமுகம், டெபுடி கமிஷனர்களான பி. பாஸ்கர், டி.கே. ராஜேந்திரன் ஆகியோரையும் உடன் அழைத்துக் கொண்டு, போக்குவரத்து நெரிசல் மிகுந்த சில முக்கிய இடங்களுக்குச் சென்று பார்த்தோம்....



* அடிஷனல் கமிஷனர்

நந்தனம் அண்ணாசாலையிலுள்ள பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் சிலை சந்திப்பு. நாள் : 9.7.96 காலை 9.30 மணி. மூன்று போக்குவரத்துப் போலீஸார், ஒரு சார்ஜெண்ட் ஆகியோர் மிகவும் பிஸியாக இயங்கிக்



• விசாரணையில் அசடு வழியும் பாதசாரிகள்...

கொண்டிருந்தார்கள்!

ஆட்டோமாடிக் சிக்னல்கள் உள்ள இந்தச் சந்திப்பில், போலீ ஸாருக்கு அப்படியென்ன பிஸி யான வேலை? எந்த வாகனமும் 'ஸ்டாப்' என்று போட்டிருக்கிற நிறுத்தக் கோட்டுக்கு முன்பாக நிறுத்தப்படுவதேயில்லை. அதைத் தாண்டி வந்து, பாதசாரிகளுக் கான பாதைகளையெல்லாம் அடைத்துக் கொண்டுதான் நிற்கிறார்கள். எனவே, அவர்களைப் பின்னுக்குத் தள்ளி, பாதசாரிகள் சாலைகளைக் கடக்க உதவிக் கொண்டிருந்தார்கள் போலீஸார்! இதுதான் அவர்களின் மிக முக்கியமான வேலையாக இருந்தது!

அப்புறம் பாதசாரிகள். பச்சை விளக்கு எரிவதற்கு முன்பாகவே சாலைகளைக் கடக்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள் அவர் கள்.

"பார்த்தீர்களா? எல்லோரும் படித்தவர்கள்.... போக்குவரத்து சிக்னல்களின் முக்கியத்துவம் இவர்களுக்குத் தெரியாதா என்ன? ஆயினும் இப்படித்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்...." என்ற அடிஷனல் கமிஷனரிடம், "அவர்களைக் கூப்பிட்டு விசா ரியுங்களேன்!" என்றோம்.

சிலரைக் கூப்பிட்டார். விசாரித்த போது, "சாரி சார்...!" என்கிற அசட்டுச் சிரிப்புத்தான் அனைவரிடமும்!

"உங்களுக்கு இங்கே ஏதாவது பிரச்னை இருக்கிறதா?" அங்கிருந்த போலீஸ்காரர் ஒரு வரிடம் கேட்டார், இரவி. ஆறுமுகம்.

"எல்லாம் வழக்கம் போல்தான் சார். சிறிது

# விதிகளை மீறும் போக்குவரத்து!




• நிறுத்தக் கோட்டை தாண்டி நிற்கும் வாகனங்கள்....

நேரத்துக்கு முன்பிருந்து இங்கே சிக்னல் விழுவதில் ஏதோ பிரச்னை இருப்பது போல் தெரிகிறது. அதனால்தான் மிகவும் கவனமாக இருக்கிறோம்..." என்றார் அவர்.

உடனே, டெபுடி கமிஷனர் பாஸ்கர் ஒயர்லெஸ்ஸில் தொடர்பு கொண்டு, சிக்னல்களை 'செக்-அப்' செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

அடுத்து அடையாறு சந்திப்பு. இங்கும் அதே போல்தான். இரவி. ஆறுமுகத்தைப் பார்த்ததும் சுந்தரம் என்ற பொதுஜனம் ஒருவர் ஓடி வந்தார்.

"சார், பீச் ரோடுக்குப் போகிற சாலையில் உள்ள பஸ் ஸ்டாப், சிக்னலுக்கு அருகிலேயே இருப்பதால், நான்கைந்து பஸ்கள் ஒரே சமயத்தில் வந்து ஒன்றுக்குப் பின் ஒன்றாக நிற்கிற போது, போக்குவரத்து பிரச்னையாகி விடுகிறது. மற்ற சாலைகளிலிருந்து வரும் வாகனங்களால் சந்திப்பைக் கடக்க முடிவதில்லை!" என்றார்.

"அதற்கு என்ன செய்யலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?"

"சிக்னலுக்குப் பக்கத்திலிருக்கும் இந்த பஸ் ஸ்டாப்பைச் சிறிது தூரம் தள்ளி - மலர் ஆஸ்பிடலுக்கு முன்பாக வைத்து விட்டால் சரியாகி விடும்!" என்றார் அவர்.

"அப்படியே செய்து விடலாம். விரைவில் செய்து விடுகிறோம்!" என்று அந்தப் பொது ஜனத்துக்கு உத்தரவாதமளித்த இரவி. ஆறுமுகம், அங்கிருந்த போக்குவரத்துப் போலீஸ்காரரான ஜெயபாலை அழைத்தார்.

"இங்கே உங்களுக்கு என்ன பிரச்னை?"

அந்த பொது ஜனம் சொன்னதையே இவரும் திருப்பிச் சொன்னார்.

"சரி, உடனடியாக பஸ் ஸ்டாப்பை மாற்றி விடுவோம். அதனால் பொது மக்களுக்கு ஏதும் இடைஞ்சல் இருக்காதே?"

"இருக்காது சார். ஜனங்களுக்கு சௌகரியமாகத்தான் இருக்கும் என்பதால் சந்தோஷப்படுவார்கள்."

"சரி, செய்து விடுவோம்!"

அப்புறம், சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு எதிரிலுள்ள சந்திப்புக்குப் புறப்பட்டோம். கடற்கரைச் சாலையான காமராஜர் சாலையில், கண்ணகி சிலை தாண்டிச் சென்று கொண்டிருந்தோம்.

முன்னால் அடிஷனல் கமிஷனரின் கார். அதற்குப் பின்னால், நம்முடைய கார்! சரியாக 10.20 மணி. அப்போது எங்களுடைய காரை முந்திக் கொண்டு சென்ற ஓர் அரசாங்கக் கார், அடிஷனல் கமிஷனருடைய காருக்கும் எங்களுடைய காருக்குமான இடைவெளியில் புகுந்து கொண்டது. எப்படி? மஞ்சள் கோட்டைத் தாண்டியபடி! அது, அமைச்சர் ஜெனிஃபர் சந்திரனின் கார்!

முதல்வருடைய காரே சிக்னல்களை அனுசரித்துப் போகிற நிலையில், ஓர் அமைச்சருடைய கார் இப்படி மீறியது ஆச்சரியமாக இருந்தது நமக்கு!

சென்ட்ரல் ஸ்டேஷன் சந்திப்பு. அண்ணாசாலையிலிருந்து வரும் பஸ்கள், பூந்தமல்லி நெடுஞ்சாலையில் நுழைவதற்காக சிக்னலில் காத்து நிற்கிறபோதே, பஸ்களிலுள்ள பல பயணிகள் திபுதிபுவென்று இறங்கி விடுகிறார்கள். அப்படி இறங்குகிற பயணிகளுக்குச் சுரங்கப் பாதைகளைத் தேடிச் சென்று சாலையைக் கடக்கும் எண்ணம் எப்படி வரும்? அப்படியே ஆட்டு மந்தைகள் மாதிரி, சாலைகளைக் கடக்க ஆரம்பித்து விடுகிறார்கள்!

"இதையெல்லாம் நீங்கள் கட்டுப்படுத்த முடியாதா?" போலீஸ் குடையில் நின்று கொண்டிருந்த போலீஸ்காரர் சுப்பையாவிடம் கேட்டோம்.

"அவர்கள் கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள். போக்குவரத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றபடியே அடிஷனல் கமிஷனர் போலீஸ் குடையில் ஏறி நின்று கொண்டார்.

"இது ரொம்பவும் நெரிசலான ஏரியா சார். அதனால் பாதசாரிகளை ஓரளவுக்குத்தான் கட்டுப்படுத்த முடியும்" என்றார் கான்ஸ்டபிள்.

"இந்தச் சந்திப்பில் மட்டும் ஒரு நாளைக்கு 1,26,000 வாகனங்கள் வருகின்றன. சராசரியாக ஒரு விநாடிக்கு இரண்டு வாகனங்கள். அதனால் போக்குவரத்தில் ஒரு நிமிஷம் குளறுபடியானாலும் 120 வாகனங்கள் நின்றுபோய் 'ஜாம்' ஆகிவிடும். எனவேதான் இங்குள்ள போலீஸாருக்கு அப்படி ஏதும் 'ஜாம்' ஆகிவிடக் கூடாதே என்கிற எண்ணத்தில் வேலை பார்ப்பதுதான் முக்கியமாகி விடுகிறது!" என்றார், டெபுடி கமிஷனர் ராஜேந்திரன்.

"இந்த நிலையில் இங்கே விபத்துக்கள் அதிகம் நடக்க வாய்ப்புள்ளதே?"

"அப்படியில்லை. காரணம் இந்தச் சந்திப்பு மிகவும் நெரிசலானதாக இருப்பதாலேயே வாகனங்கள் வேகமாக வர முடியாது. அதனால் பெரிய விபத்துக்கள் இங்கே நடக்காது!"

கடைசியாக, கமிஷனர் அலுவலகம். அடிஷனல் கமிஷனர் இரவி. ஆறுமுகத்தின் அறை. அவருடன் டெபுடி கமிஷனர்கள். கூடவே நாம்.

"வாகன ஓட்டிகளும் சரி, பாதசாரிகளும் சரி, யாருமே முழுமையான அளவுக்குப் போக்குவரத்து விதிகளைக் கடைப்பிடிப்பதில்லை என்பதைக் கண் கூடாகவே பார்த்



நடிகை : உங்களுக்கு நான் வேணுமா? என்னால கிடைக்கக்கூடிய பொருளும் புகழும் வேணுமா?

காதலன் : என்ன ஜலஜா அப்படிக் கேட்டுட்டே. நீ இல்லாட்டி எனக்குப் பொருள் ஏது? புகழ்தான் ஏது...?

— சீர்காழி வி. ரேவதி

தோம். இதற்கு என்னதான் தீர்வு?'' நாம் கேட்டோம்.

''இப்போது மென்மையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம், 'தயவு செய்து போக்கு வரத்து விதிகளைக் கடைப்பிடியுங்கள்' என்று. பிறகு எச்சரிப்போம். அப்புறம் கடுமையான நடவடிக்கைகளை எடுக்கலாமென்றிருக்கிறோம்; அதாவது சட்டப்படியான நடவடிக்கைகள். அப்படி நாங்கள் எடுக்க ஆரம்பிக்கிற போது, ஏதோ ஒருவாரம் பத்து நாள் அப்படிச் செய்தோம்; பிறகு பழையபடி விட்டு விட்டோம் என்றில்லாமல், தொடர்ந்து நட வடிக்கைகளை மேற்கொள்ளப் போகிறோம். அப்போது நிச்சயமாக இந்த விதி மீறல்கள் இருக்காது!''

''போக்குவரத்து விதிகளை மீறுபவர்களுக்கு அந்த இடத்திலேயே அபராதம் என்பதெல்லாம் இருக்கிறதே. நாம் சென்ற இடங்களில் எங்குமே அப்படி அபராதம் ஏதும் வசூலிக்கப் படவில்லையே?''

''ரொம்பவும் அபூர்வமாக நடக்கிற பெரிய குற்றங்களுக்குத்தான் அப்படி வசூலிக்கிறோம். இனிமேல்தான் கோட்டைத் தாண்டி நிறுத்துகிற வாகனங்கள் மற்றும் கண்டபடி சாலைகளைக் கடக்கும் பாதசாரிகள் ஆகியோரின் மேலும் நடவடிக்கை எடுக்க ஆரம்பிக்கப் போகிறோம்.''

''போக்குவரத்துப் போலீஸார், விதிகளை மீறும் வாகன ஓட்டிகளிடமிருந்து லஞ்சம் வாங்குவதால்தான் பலரும் தைரியமாக விதிகளை மீறுகிறார்கள் என்கிற கருத்து பரவலாக இருக்கிறதே?''

''போக்குவரத்துப் போலீஸார் அனைவரும் நூற்றுக்கு நூறு சுத்தமானவர்கள் என்று நான் சொல்லவில்லை. லஞ்சம் என்கிற விஷயம் சமுதாயம் முழுவதுமாகப் பரவிக்கிடக்கிற போது, அதன் பாதிப்பு நிச்சயம் இங்கும் இருக்கத்தான் செய்யும். அது மிக மிகக் குறைவு என்பதே உண்மை. விதிகளை மீறுதல் தங்கள் உயிருக்குத் தான் ஆபத்து என்கிற உணர்வு வாகன ஓட்டிகளுக்கு முழுமையாக வர வேண்டும். இந்த ஆண்டு மே மாதம் முடிய நடந்த விபத்துக்கள் 2244. அதில் இறந்தவர்கள் 238! காரணம் என்ன? போக்குவரத்து விதிகளை வாகன ஓட்டிகள் முழுமையாகக் கடைப்பிடிக்க வில்லை என்பதுதான். ஆக, பொது மக்களிடமே இது பற்றிய உணர்வு வந்து விட்டால் பிரச்னைகள் சுலபமாகி விடும்!''

''சென்னை மெகா நகரம் ஆகிவிட்ட நிலையில், போக்குவரத்து நெரிசலைக் குறைக்க என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?''

''சென்னை நகரின் மக்கள் தொகை 54.7 லட்சம். வாகனங்களின் எண்ணிக்கை சுமார் 12 லட்சம். ஒவ்வொரு நாளும் சென்னை நகரில் ரெஜிஸ்ட்ரேஷன் செய்யப்படும் புதிய வாகனங்களின் எண்ணிக்கை 275! இந்த நிலையில் என்ன செய்வது? அதனால்தான் பூக்கடையிலுள்ள வெளியூர் பஸ் நிலையங்களை கோயம்பேட்டுக்கு மாற்றும் திட்டமும், எழும்பூரிலிருந்து ஆம்னி பஸ்கள் புறப்படுவதை மாற்றி, இனி அவை எம்.ஜி.ஆர். திரைப்பட நகருக்கு எதிரிலிருந்து புறப்படும்படி செய்யும் திட்டமும் இருக்கிறது. அப்புறம் முக்கியமான சந்திப்புகளில் மேம்பாலம் கட்டுவது. அண்ணா மேம்பாலத்துக்குப் பிறகு, அது போல் மிகப் பெரிய அளவில் எந்த மேம்பாலமும் கட்டப் படவில்லை. இதை முதல்வரும் உணர்ந்துள்ளார். எனவே, அண்ணா மேம்பாலத்தைக் கட்டிய அவரே இனி புதிய மேம்பாலங்கள் கட்டவும் உதவுவார் என்று எதிர்பார்க்கிறோம்!''

''நீங்கள் எடுக்கிற நடவடிக்கைகளுக்கு அரசியல் தலையீடுகள் ஏதும் இருக்கிறதா?''

''சுத்தமாக இல்லை. நகரின் போக்குவரத்து சீர்பட வேண்டும்; மேம்பட வேண்டும் என்பதில் முதல்வர் மிகவும் ஆர்வமாக இருக்கிறார். தலைமைச் செயலாளர், உள்துறைச் செயலாளர் ஆகியோரும் ஆர்வமாக உள்ளனர். நகரின் போக்குவரத்து மேம்பாட்டுக்காக நாங்கள் ஒவ்வொரு நாளும் என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறோம் என்பதை, உள்துறைச் செயலாளர் தினசரி எங்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார்!'' என்றார்கள் அடிஷனல் கமிஷனரும் மற்ற டெபுடி கமிஷனர்களும்.

ஆக, போக்குவரத்து விதிகளில் அலட்சியம் காட்டுபவர்களுக்கு, விரைவிலேயே கடுமையான நடவடிக்கைகள் காத்திருக்கின்றன!

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

வண்ணப்படங்கள் : **யோகா**



# டப்பாங்குத்து கேட்கிறார் பாலுமகேந்திரா!

"உலகே மாயம், வாழ்வே மாயம்!" என்று தகரத்தை பிளேடால் சுரண்டினாற் போன்ற குரலில் பாடிக் கொண்டிருந்தான் தண்டபாணி.

இடம் – ஏ.வி.எம். ஸ்டுடியோவின் பிள்ளையார் கோவில். கையில் சிங்கிள் சாயா வைத்துக் கொண்டு, ஏழு நாள் தாடியுடன் எங்கோ நோக்கி, பாடிக் கொண்டிருந்தவன், என்னைப் பார்த்ததும், "நல்ல சமயத்துல வந்தே! டீக்கு காசு கொடுத்துடு. உனக்கும் வேணுமானால் ஒண்ணு வாங்கிக்கோ" என்றான்.

"ஹ! என்ன ஒரு உபசரிப்பு!" என்றேன்.

"கேளு. பாலுமகேந்திரா அடுத்த படம் தொடங்கிட்டார். இந்து – முஸ்லீம் ஒற்றுமைதான் சப்ஜெக்ட். ஈஸ்வரிராவ்னு ஹைதராபாத்லேருந்து ஒரு பாப்பாவைக் கூட்டி வந்திருக்கார்."

"பாப்பாவுக்கு லாலி-பாப் பிடிக்குமாமா?"

"லாலி-பாப்போ, ராயல் சேலஞ்சோ. அதுவல்ல விஷயம். விக்னேஷ், விக்ரம்னு ரெண்டு ஹீரோ படத்தில். டைட்டிலைப் பாரு. 'அப்துல்-ராம்'. சரியான மசாலா சப்ஜெக்டாம்."

"பாலுமகேந்திராவா?"

"இதுக்கே வாயைப் பிளந்தேன்னா? அடுத்த நியூஸ் சொன்னா ஆடிப் போயிடுவே. 'மறுபடியும்' படத்துல 'ஆசை அதிகம் வெச்சு' பாட்டு சூப்பர் ஹிட் ஆச்சு இல்லை? அந்த ஜுரம் ஐயாவுக்கு இன்னும் விடலையாம். இளையராஜாகிட்ட சொல்லி, அதே மாதிரி வேகரிதம்ல ஒரு காரசார டப்பாங்குத்து கேட்டிருக்கார் பாலு. உன்ன அதான் நடந்துட்டிருக்கு!" என்று ரெக்கார்டிங் தியேட்டரைக் கைகாட்டினான் த. பாணி.



"எங்கேருந்துடா இந்த மாதிரி நியூஸெல்லாம் பிடிக்கறே?"

"அது உனக்கு வேணாம். இன்னொண்ணு சொல்றேன், கேட்டுக்கோ. உல்லாசம் படத்துல கமலஹாசன் ஒரு பாட்டுப் பாடி இருக்கார்."

"பார்த்தியா? பழைய நியூஸ்."

"முந்திரிக் கொட்டை. முழுசாக் கேளு. கார்த்திக் ராஜா, கமலஹாசனைக் கூப்பிட்டுப் பேசினார்; உங்களைத் தவிர இந்த ஹை பிட்ச் பாடலைப் பாட நாட்டுல ஆள் கிடையாதுன்னு சொன்னார்; கமல் உச்சிகுளிர்ந்து போய் உடனே பாடிக் குடுத்தார்னுதானே படிச்சிருப்பே?"

"அதே."

"இதைக் கேளு. கார்த்திக் ராஜாவுக்கு முதல்ல கமலைப் பாடவைக்கிற ஐடியா இல்லையாம்."

"பின்னே?"

"தீபன் சக்ரவர்த்தியோட அண்ணன் டி.எல். மகராஜனைத்தான் கூப்பிட்டுப் பேசியிருக்கார். அவர் மறுத்துட்டதால் தான் கமல்."

"அடடே! ஏன் மறுத்தாராம்?"

"நான் டோட்டலா பக்திப் பாடல்களில் இறங்கிட்டேன்; இப்ப சினிமாவுல பாடினால் இமேஜ் கெட்டுடும்னுட்டாராம்."

"அப்படிப் போடு. கமலுக்கு இது தெரியுமா?"

"இந்த நிமிஷம் வரைக்கும் தெரியாது!"

சிங்கிள் டீயின் கடைசி சொட்டு வரை சர்ரென்று உறிஞ்சு வைத்து விட்டு, அவசரமாக ஒரு பான்பராக்கை வாங்கி, உரித்துப் போட்டுக் கொண்டு, "தெரியுமா சேதி?" என்றான்.



• கமலைத் தவிர...

"சொல்லு. தெரிஞ்சுக்கறேன்."

"விருதுக்காக நாய் அலை, பேய் அலை அலையறவங்களைப் பார்த்திருப்பே. வாங்கின விருதை குடுத்தவரைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கியா?"

"யார் அது?"

"லெனின். தெரியுமில்லை? 'நாக்-அவுட்' குட்டிப் படத்துக்கு நேஷனல் அவார்டு வாங்கினாரே?"

"ஆமா?"

"ரொம்ப ஏழ்மை நிலையில இருந்த ஒரு சக கலைஞர்கிட்ட அந்தத் தங்க மெடலைக் குடுத்து, வித்து, பணத்தை யூஸ் பண்ணிக்கங்கன்னுட்டாராம்."

"நெசமாவா?"

"டாலரைத் தொங்கப் போட்டுக்கிட்டு அலையவா முடியும்? யாருக்காவது அது உபயோகமாச்சுன்னா, என் படத்துக்கு அதுதான் விருதுன்னு சொன்னாராம்."

"சே, மனுஷன்! புல்லரிக்குது தண்டபாணி! போகட்டும். போன வாரம் பார்க்கறப்போ யாரோ ஒரு நடிகை - மொட்டை அது இதுன்னு பொடி வெச்சே?"

"மறக்கலையா இன்னும்?"

"சரிதான். நடிகைன்னுட்டே. மறக்குமா? சொல்லு, சொல்லு!"

"பம்பாய்ல பெரிய போட்டோகிராபர் சுரேஷ் மாலி."

"அவர் யாரா இருந்தா இருக்கட்டும். அந்தப் பொண்ணு விஷயத்துக்கு வா."

"நீ தேற மாட்டே. பொறுமையாக் கேளு. அந்த சுரேஷ் மாலியோட பொண்ணு, அந்த்ரா மாலி. அம்மணிக்கு கமல்னா சரியான பைத்தியம். கமல் படத்துல நடிக்கறதுன்னா மொட்டை போட்டுக்கக் கூடத் தயார்னு சொல்லிட்டு, பம்பாய்லேருந்து மூட்டை முடிச்செல்லாம் கட்டிட்டு மெட்ராஸ் வந்துடுச்சு."

"அடப் பாவமே!"

"கேளு. அப்படி இப்படி அலைஞ்சு, ஒரு வழியா சான்ஸும் கிடைச்சது. பாலசந்திர மேனன் டைரக்ஷன்ல, கமல் நடிக்கறதா இருந்த 'கண்டேன் சீதையை' படத்துல சீதை ரோல்."

"போச்சுறா. கமலுக்கும் மேனனுக்கும் ஏதோ லடாய்... படம் ஊத்தி மூடிக்கிச்சுன்னு சொன்னாங்களே!"

"அதான். பாப்பா பயங்கர அப்ஸெட் ஆகி, பம்பாய்க்கு கிளம்பிடுச்சி. அநாத ரட்சகனாட்டம் சரத்குமார் ஹெல்ப் பண்ணியிருக்காராம்."

"மெய்யாலுமா?"

"பின்ன? அவரோட 'சபாஷ்' படத்துல அந்த்ராதான் ஹீரோயின்."

"இதுல மொட்டை அடிக்க வேண்டி இருக்குமாமா?"

"தெரியலை. கேட்டுச் சொல்றேன். ஆனா ஒண்ணு. கிடைச்சா மொட்டை அடிக்கறதுக்கு இங்க ஏராளமா ஆளுங்க காத்துட்டிருக்காங்க."

"யாரை யார் மொட்டை அடிச்சாங்க, லேட்டஸ்டா?"

"பாவம்யா. ஒரு சின்னப் பொண்ணு. ராயபுரத்துல இருந்த தெலுங்குப் பொண்ணு."

"என்ன அதுக்கு?"

"நடிக்கிற ஆசையில, யாரோ சொன்னாங்கன்னுட்டு, ரயில் ஏறி ஹைதராபாத் போச்சாம்."

"தெலுங்குப் படமா?"

"ஆமா. விஜயசாந்திக்கெல்லாம் வயசாயிடுச்சி. நீ போனா ஒரு கை பார்த்துரலாம்னு ஏத்தி விட்டிருக்காங்க. இது, அம்மாவைக் கூப்பிட்டுட்டு, ஹைதராபாத் போயிருக்கு."

"சரி."

"தப்பான ஆளுங்க கையில சிக்கி, ரொம்ப சிரமப்பட்டிருக்கு. ரெண்டு தடவை வித்திருக்காங்க."

"நகைகளையா?"

"நீ வேற! அந்தப் பொண்ணையா! வேற வேற கை மாறி, கடைசியில யாரோ புண்ணியவான், ஜூனியர் ஆர்ட்டிஸ்ட் அஸோஸியேஷன்ல கார்டு வாங்கிக் குடுத்திருக்கான்."

"அடப் பாவமே!"

"ஒரு வருஷம் படாதபாடு பட்டு, இப்பத்தான் காசு பார்க்க முடியுதுன்னு ரொம்ப வருத்தப்பட்டுப் பேசிச்சி."

"உன்கிட்டயா?"

"ஆமா. நேத்து சாயங்காலம் இப்படி சும்மா நடந்து வாஹினி பக்கமா போயிட்டிருந்தனா? அங்க ஒரு தெலுங்கு ஷூட்டிங். பிரேக்குல சும்மா பேசிட்டிருந்தேன்."

"சே, பாவம்டா!"

"என்ன செய்யறது? அதிகாலையில இருட்டு அதிகமா இருக்கும்; சீக்கிரம் விடியப் போகுதுன்னு அர்த்தம் அப்படீன்னு குளுகோஸ் ஏத்திட்டு வந்தேன்!"

"அட, பரவாயில்லையே?"

"வரட்டுமா? டீ காசு மறக்காம குடுத்துடு."

- கிச்சா

# இந்தாயச் சிறகுகள்

**15**

"பிரேமா, பால்சாமி ஒம் புருஷன் மட்டுமில்லே, எங்களுக்கும் தோழர். கட்சி சார்பா தாசில்தாரை, கலெக்டரை அடிக்கடி பார்த்துப் பேசறவரு. அவரை இழிவுபடுத் துனா... ஒட்டு மொத்த இயக்கத்தையே இழிவுபடுத்துன மாதிரிதான். அந்த ஆளைச் சும்மா விடமாட்டோம்மா..."

- என்ற தங்கம்மா பிரியத்துடன் ஒரு தாயைப் போல அவன் மேல் கையைப் போட்டார். பாசத்துடன் பார்த்தார்.

பெண்களை ஒட்டுமொத்தமாகப் பார்த்தார்.

"எல்லாரும் அவங்க அவங்க வீட்டுக்குப் போங்க. ரேஷன கடைக்குப் போற மாதிரி... காலி டின், பை எடுத்துக்கிட்டு உடனே தாலூகாபீஸ் வந்து சேருங்க. சீக்கிரம் வாங்க. லேட்டாயிர வேண்டாம்."

எல்லாரும் புறப்பட்டனர். பிரேமாவும் புறப்பட்டாள். அவளை நிறுத்திய தங்கம்மா -

"நீ இரும்மா."

"எதுக்கும்மா?"

"நாம ரெண்டு பேரும் சேர்ந்து, தாலூகாபீஸ் போவோம்."

"தோழர், தாலூகாபீஸுக்கும் போன் பண்ணிச் சொல்லிருங்க, திடீர் மறியல்னு. அப்படியே சிவில் சப்ளை தாசில்தாருக்கும் சொல்லிருங்க."

பிரேமாவின் தோள்பட்டையில் அம்மாவின் உள்ளங்கை. மிருதுவான வருடல். மனசின் அடியாழம் வரைக்கும் மின் அதிர்வாகப் பரவுகிற ஓர் உணர்வு.

"பிரேமா, சாப்பிட்டியாம்மா?"

"காலையிலேயே சாப்பிட்டுட்டேம்மா."

"காப்பி ஏதாச்சும் போட்டுத் தரட்டா?"

"ஒன்னும் வேண்டாம்மா."

"எனக்காகச் சரின்னு சொல்லும்மா. ஒன்னைச் 'சாக்கு' வைச்சு, நானும் ஒரு கிளாஸ் சாப்பிட்டுக்குவேன்."

இது பொய்யான உபசரிப்பல்ல. விருந்



தாளியை உபசரிக்கிற அந்நியத் தன்மையில்லை. அம்மா மகளிடம் சொல்வது போல ஓர் அந்நியோன்யம். உரிமையான பரிவு.

அலுவலகத்தின் ஒரு மூலையில் ஸ்டவ், தட்டு முட்டுச் சாமான்கள். தங்கம்மா ஹார்லிக்ஸ் கலக்கி எடுத்துக் கொண்டு வந்தார், ரெண்டு கிளாஸில்.

"சாப்புடும்மா. போராடுறதுக்கும் தெம்பு வேணும்லே?"

பிரேமாவுக்குள் பிரளயம். அவளைத் தலை குப்புறக் கவிழ்த்துகிற பிரளயம். அன்புப் பிரளயம்.

இப்படிப்பட்ட அம்மாவையா வெறுத்தோம்? தனக்கென எதுவும் வைத்துக்கொள்ளாமல், ஓய்வெடுக்க வேண்டிய முதுமை வயசையும், மிச்சமிருக்கும் உயிரையும் கூட அறிமுக

# மேலாண்மை பொன்னுச்சாமி

மற்ற மக்கள் நலனுக்காக அர்ப்பணித்திருக்கிற இந்த அம்மாவையா? துன்புறுத்தப்படும் எல்லாப் பெண்களையும் தன் மகளாகக் கருதி, கசிந்துருகி, அவர்களது விமோசனத்திற்காக உயிரைக் கொடுத்து உளமாரப் போராடுகிற இந்த லோக மாதாவையா? மாதர் ரட்சகரையா?

அவளுக்குள் முள்ளாய்க் குத்தியழுத்துகிற குற்ற உணர்வு.

'ச்சேய்! இந்தம்மாவோட அருமையைச் சொல்ல அவரு எத்தனை தடவை வாயைத் தெறந்தாரு? வெறுத்துப் போற என்னோட மொகக்குறி



யைப் பாத்துட்டு, வாயைச் சுருக்கிக் கிட்டாரு? பொல்லாதவங்களைக் கொண்டாடுற முட்டாள்தனத்தை விட, நல்லவங்களைக் கொண்டாடாம இருக்குற மொரட்டுத்தனம்.... ரொம்பக் கொடுமையானது..'

அவளுக்குள் ஏதேதோ நினைவுகள். உன்மன உளைச்சல்கள். அந்த அம்மாவின் அன்புப் பிரவாகத்தின் பெரும் சுழற்சியில் அவள் கசடுகளெல்லாம் சுழன்று கரைய... அவள், அவளாக மாறுகிற அதிசயம்.

"போவமா பிரேமா?"

"ஆவுட்டும்மா."

ரெண்டு கிளாஸ்களையும் பிரேமாவே கழுவி வைத்தாள். புறப்பட்டனர்.

தாலூகாபீஸ் போனால், நிலைமையே பெரும் கலவர நிலவரமாயிருந்தது. போன பெண்கள் மட்டுமல்ல... கூடுதலாகவும் வந்திருந்தனர். நூற்றுக்கும் மேலே. காலிடின்கள், பைகள் நிறைய நிரப்பப்பட்ட தெருப் புழுதி. தாலூகாபீஸின் வாசல்களை மறித்து டின்களும், புழுதிப் பைகளும். நாற்பதுக்கும் மேலான போலீஸ். துப்பாக்கிகளும் பூட்ஸுகளுமாய் பயங்கரமாய் நின்றனர்.

கோஷமிட்டுக் கொண்டே பெண்கள். சிவப்புச் சேலையும், வெள்ளை ஜாக்கெட்டுமாய் இருக்கிற ஏழெட்டுப் பெண்கள் கோஷம் கொடுத்துக் கொண்டிருந்தனர்.

தொடர்ந்து சகல பெண்களும்.

"விற்காதீர், விற்காதீர்."

"குடும்ப அட்டைகளை விற்காதீர்!"

"அவமதிக்காதே, அவமதிக்காதே."

"மக்கள் தலைவர்களை அவமதிக்காதே."

"மாதர் தம்மை இழிவு செய்யும் மடமை தன்னைக் கொளுத்துவோம்."

கோஷமிடுகிற பெண்களை உள்ளிருந்து வேடிக்கை பார்க்கிற ஊழியர்கள். கோஷத்தின் அடர்த்தியில், மொத்த பஜாரே எட்டிப் பார்த்தது.

பிரேமாவுக்குள் நடுக்கம்தான். ஆயுதம் தாங்கிய கான்ஸ்டபிள்களைப் பார்த்துப் பதறினாள். துப்பாக்கிச் சூடு வரைக்கும் போய் விடுமோ என்று நடுங்கினாள். அவளது உள் மனத்தைப் புரிந்து கொண்ட மாதிரி, தங்கம்மா பிரேமாவைப் பார்த்துப் புன்னகைத்தார். அவளது உள்ளங்கையைப் பற்றி மிருதுவாக அழுத்தி ஆறுதல் அளித்தார். "பயப்படாதே. நா இருக்கேன்" என்று எவ்வளவோ மொழிகளைப் பேசுகிற மிருதுவான பற்றுதல்.

ஆனாலும்... பிரேமாவுக்குள் பயம். புதிய அனுபவம். புதிய உலகமாய்த் தோன்றுகிற சம்பவம். உள்ளூரப் பயந்தாள்.

ஆனால்.... பயந்த மாதிரி எதுவும் நடக்கவில்லை.

சற்று நேரத்தில் காரில் வந்து இறங்கிய சப்-கலெக்டர் அலுவலக அறைக்குள் பேச்சுவார்த்தைக்கு அழைக்கப்பட்ட தங்கம்மாவும், பிரேமாவும்.

அதிகாரிகளுடன் கோபம் கோபமாக வாதிட்ட தங்கம்மா. கடைசியில் -

கிளார்க்கும், தாசில்தாரும் வருத்தம் தெரிவிக்க, சிவில் சப்ளை தாசில்தார் குடும்ப அட்டைகள் குளறுபடிகளை உடனடியாக நீக்கித்தருவதாக சத்தியம் பண்ணாத குறையாக உத்தரவாதம் சொன்னார்.

பிரேமாவுக்கு பிரமிப்பாக இருந்தது. பயந்ததற்கு நேர்மாறாக, எல்லாம் சுமுகமாய் முடிந்து போன அதிசயம்.

அதுமட்டுமல்ல... பெண்கள் திரண்டு போராடுகிற போது, அதற்குக் கிடைக்கிற சக்தி, மக்கள் இயக்கத்திற்கு இருக்கிற சமூக மரியாதை... எல்லாமே ஆச்சர்யமாக இருந்தது.

இந்த அனுபவம், அவள் மனத்தோலை உரித்து அவளைப் புதுமைப்படுத்திவிட்டது. 'அடுப்பங்கரையே உலகம்' என்று, 'அஞ்சிக் கூசி ஒடுங்குவதே ஒழுக்கம்' என்று கூண்டுக்கிளியாக இருந்த பிரேமா, ஏற்கெனவே கதவைத் திறந்திருந்தாள். முளைத்திருந்த சிறகுகளைக் கோதிக் கொண்டு வெளியே நடந்திருந்தாள்.

இந்த அனுபவத்திற்குப் பிறகு, ஏற்பட்ட பலப்பல அனுபவங்கள், கற்ற கல்வி, ஞான வளர்ச்சி, ஆகாயத்தையே சிறகுகளாகக்

## இவருக்குப் பிடிக்காத இரண்டு பேர்!



**எனக்கு உலகத்திலே இந்த இரண்டு பேரை அடியோடு பிடிக்காது. நான் வெளியில் காத்துக் கொண்டிருக்கும் போது டெலிபோன் பூத்திற்குள் ஆக்ரமித்துக் கொண்டு வளவளவென்று வெகு நேரம் பேசுபவர் ஒருவர்.**

**பூத்திற்குள் நான் ஆர்வத்தோடு பேசிக் கொண்டிருக்கும் போது வெளியே குட்டி போட்ட பூனைபோல் அங்கும் இங்கும் எரிச்சலோடு நடந்து கொண்டிருப்பவர் இன்னொருவர்.**

***(ஜன சங்கத் தலைவராக வாஜ்பாய் இருந்த போது ஒரு கட்டுரையில் எழுதியது.)***

**படித்து ரசித்தவர் : என். சுந்தரி**

கொண்டு, பிரபஞ்சம் முழுவதும் பறந்து திரிகிற சுதந்தர மனுஷியாகி விட்டாள்...

அலுவலகத்தின் முன்பு போட்டிருந்த மேடையில் துண்டுகளும், மாலைகளும் அணிவிக்கப்படுகின்றன, பால்ச்சாமிக்கு. கூட்டத்தை விலக்கிக் கொண்டு மாலையுடன் வந்தவள் பிரேமாதான். மாவட்டச் செயலாளர் மைக்கைப் பிடித்துப் பேசினார்.

"எத்தனை ஆட்சி மாற்றம் நிகழ்ந்தாலும் ஏறிக் கொண்டே போகும் விலைவாசி உயர்வு, தனது பயணத்தை நிறுத்திக் கொள்ளவேயில்லை. ஏழை மக்கள் வாங்கி உபயோகிக்கும் பொருளின் விலையெல்லாம் யானை விலை, குதிரை விலையாக ஏறிக் கொண்டே போகிறது. விலைவாசி உயர்வுக்கெதிராக நாடு பூராவும் நாம் நடத்திய மறியல் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்று திரும்பியிருக்கும் தோழர் பால்ச்சாமிக்கு.. மாதர் சங்கக் கிளைச் செயலாளர் பிரேமா மலர் மாலையை.. மாணிக்க மாலையாக அல்ல.. மலர்மாலையாகவே அணிவித்து, பாராட்டிப் பேசுவார்."

ரெட்டைச் சந்தோஷத்தில் கைதட்டலின் சத்தம் ஏக குஷியாகக் கிளம்பியது.

மாலையை இவன் அணிவிக்க, அந்த மாலையை அப்படியே சுழற்றி அவன் கழுத்தில் பால்ச்சாமி போட.. ஒரே சிரிப்பு, கூட்டுச் சிரிப்பொலி.

சிரிப்புச் சத்தம் அடங்கிய பிறகு.. அவள் பேச ஆரம்பித்தாள். பால்ச்சாமி மனசுக்குள் பெருமிதம்.

சினிமாவுக்கு சைக்கிளில் ஏறுவதற்கு கூசிப் பதறிய அந்தப் பிரேமாவா, இது?

நாலு பேர் கூடுகிற இடத்தில் தலைகாட்டப் பயந்தவளா? உண்ணாவிரதப் பந்தலில் உட்கார வேண்டிய கட்டாயத்தில், காய்ச்சலே வந்து மயங்கி விழுந்த அந்தக் கூண்டுப் பறவையா இது?

இத்தனை பெரிய ஜனக்கூட்டத்தில் 'டாம் டாம்' என்று மணி கொண்டு அடித்து மாறி முழங்குகிற பிரபஞ்சப் பறவை.

பெருமிதம் ததும்பப் பார்க்கிற பால்ச்சாமியை பேச்சுக்கிடையில் கடைக் கண்ணால் பார்த்தாள். அவனது பரவச முகம்; பெருமிதமும் பூரிப்புமாக மலர்ந்திருக்கிற முகம்.

இப்படிப்பட்ட பூரணப் பெண்ணாக இவளை மாற்றுவதற்காக அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகள். அதன் சாயங்கள். மாயங்கள்.

அவளுக்குள்ளும் பொங்கித்ததும்பும் உணர்வுகள்.

அந்த வட்டாரம் முழுவதும் பரவி ஒலி... அவளது மனசு. ஆகாயச் சிறகுகளோடு பிரபஞ்சம் தழுவிப் பறக்கிற ஒரு வெற்றித் தத்துவத்தின் கீதமாய்த் தொடர்கிற அவளது முழக்கம்.

(முற்றும்)

# KALKI SHOPPING PAGE

என்னா சாமி? உங்க நண்பரை வரவேற்க தயாராகிட்டீங்க போலிருக்கே?



1996 ஜூலை 21
தாது ஆடி 6
மலர் : 54
இதழ் : 51

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## நரசிம்மராவால் நாட்டுக்கே தலைகுனிவு!

'உள்துறை இணை அமைச்சர் தஸ்லிமுதீனை வீட்டுக்கு அனுப்புங்கள். அவர் பேரில் கிரிமினல் குற்றச்சாட்டுகள் உள்ளன' என்று காங்கிரஸ் தலைவர்கள் ஒட்டுமொத்தமாகக் குரல் எழுப்பினார்கள்.

இப்போது நரசிம்மராவ் பேரிலேயே குற்றச்சாட்டு பதிவாகியிருக்கிறது. அதுவும் இந்திய குற்றவியல் சட்டத்தின் 120 B/420 பிரிவின் கீழ். அதாவது, சந்திராசாமியுடன் கூட்டுச் சேர்ந்து, திட்டமிட்டு ஏமாற்றும் குற்றத்தில் ஈடுபட்டதற்காக! இதற்கப்புறமும் காங்கிரஸ் தரப்பில் என்ன சொல்கிறார்கள்?

"இதில் தர்மசங்கடம் எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை" என்கிறார் வி.என். காட்கில். ராவின் ராஜினாமா கோரி ஓரிரு காங்கிரஸ் குரல்கள்தாம் பலவீனமாக ஒலிக்கின்றன. காங்கிரஸ் கட்சிக்குள் தலைமையை எதிர்த்துப் புரட்சியே வெடிக்க வேண்டாமோ...?

ராவ் பிரதமராக இருந்தபோது சிந்தியா, சுக்லா போன்றவர்களின் பெயரில் குற்றச்சாட்டு எழுந்ததால் அவர்கள் ராஜினாமா செய்யும்படியாயிற்று என்பதும் குற்றம் சாட்டப் பெற்றவர்களுக்குத் தேர்தல் டிக்கெட் தரப்படவில்லை என்பதும் வெகு சமீபத்திய நிகழ்ச்சிகள்.

ஆனால் ராவ் மீதோ, ஜெ.எம்.எம். வழக்கு, யூரியா இறக்குமதி ஊழல், ஸெயின்ட் கிட்ஸ் வழக்கு என்று மூன்று-நான்கு குற்றச்சாட்டுகள் பதிவாகியும் கல்லுளி மங்கனாக ராஜினாமா செய்யாமல் இருந்து வருகிறார்.




தனக்கொரு நீதி, பிறர்க்கொருநீதி என்று வைத்துக் கொண்டு, காங்கிரஸ் தலைமை வெட்கமின்றிச் செயல்படுவதைத்தான் இது உணர்த்துகிறது.

'உடனே பதவி விலகுங்கள்' என நரசிம்மராவை வலியுறுத்த வழியின்றி, ஏதோவொரு வாய்ப்பூட்டு இதர காங்கிரஸ் தலைவர்களுக்குப் போடப்பட்டிருக்கிறது.

சந்திராசாமி போன்ற நம்பத்தகாத நபர்களுடன் இழையக்கூடிய ஒருவர், மலிவான ஏமாற்று வித்தையில் ஈடுபடக்கூடிய ஒருவர், இத்தகைய வாய்ப்பூட்டுகளுக்கு என்ன விலை வேண்டு மானாலும் கொடுக்கக் கூடியவர்தான் என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது.

குற்றம் ருசுவாகாமலே போகலாம், அல்லது, வழக்கு இழுத்தடித்து மறக்கப்படலாம்; அதற் குள் இன்னொரு தேர்தல் வந்து போகலாம்... ஆனால், என்ன நடந்தாலும் பாரம்பரியப் பெருமை மிக்க காங்கிரஸ் கட்சியின் வரலாற்றில் விழுந்துள்ள மாபெரும் கரும்புள்ளி அழியப் போவதில்லை. ஒரு முன்னாள் பிரதமரின் பேரில் இவ்வாறு குற்றம் சாட்டப்பெற்றுள்ளது அவர் சேர்ந்த கட்சிக்கு மட்டுமின்றி நாட்டுக்கே தலைகுனிவான விஷயம்.

ராஜினாமா செய்து, ஒரு துளி மரியாதையையாவது மிச்சமாக்கிக் கொள்வாரா நரசிம்ம ராவ்?

## கருணாநிதிக்கு இரட்டைத் தலைவலி!

அரசு விழாக்களில் ஆடம்பரமாகச் செலவு செய்யக் கூடாது என்று உத்தரவிட்டு வழி காட்டு நெறிகளையும் வகுத்துக் கொடுத்திருக்கிறார் முதல்வர். பாராட்டி மகிழும் அதே நேரத்தில் அவரைச் சுற்றி வியூகம் அமைத்து நெருக்கும் இரு பிரச்னைகளையும் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது.

முதல் பிரச்னையாக விலைவாசி: காய்கறிகள், உணவுப் பொருள்களின் விலைகள் விஷம் போல் ஏறுகின்றன. டீசல் விலை உயர்வால் விலைவாசி மேலும் உயரக்கூடும். இரண்டாவதாக காவிரி நீர்ப் பிரச்னை அச்சுறுத்துகிறது.

இடைக்கால நிவாரணமாக, சென்ற ஆண்டே நடுவர் மன்றம் திறந்துவிடச் சொன்ன




நீரின் அளவில் இன்னும் 15டி.எம்.சி. பாக்கியிருக்கிறது. அதைத் தற்போது கேட்டால்கூட, அதில் வெறும் ஐந்து டி.எம்.சி. தருவதாக கர்நாடக மாநிலம் இழுத்தடிக்கிறது.

நடுவர் மன்றத்தின் இடைக்கால தீர்ப்பை அமுல்படுத்த நடவடிக்கை எடுக்குமாறு அன்றைய பிரதமர் நரசிம்மராவை உச்சநீதி மன்றம் கேட்டுக் கொண்டது. அதற்கு அன்றும் பலன் இல்லை; இன்றைக்கும் பலன் இல்லை.

கருணாநிதி உச்சநீதிமன்றத்திடம் மீண்டும் மனு செய்திருக்கிறார். இதற்கிடையில் காவிரி நடுவர் மன்ற நீதிபதி ராஜினாமா செய்திருக்கிறார். 'சொந்த காரணங்களுக்காக' விலகியதாக அவர் கூறினாலும் மத்திய அரசின் அலட்சியப் போக்கினால் மனம் நொந்து, அவர் விலகியதாக நம்ப இடமிருக்கிறது.

காவிரி நடுவர் மன்றம் என்பது நீதிமன்றம் இல்லையென்றாலும் அதற்குச் சமமான ஓர் அமைப்பு. அதன் ஆணை மதிக்கப்பட வேண்டும்.

அவ்வாறு மதிக்கப்படவில்லை என்பதால்தான் உச்சநீதி மன்றம் வரை சென்று அதை அமுல்படுத்தும்படி நீதி கோர வேண்டியுள்ளது. உச்சநீதி மன்றமே உத்தரவிட்ட பிறகும் கர்நாடகா அரசு அதைக் கேட்கத் தயாராயில்லையெனில் சட்டத்துக்கும் நீதிமன்றங்களுக்கும் அர்த்தமேயில்லாமல் போகிறது.

ஒரு மாநில அரசே, நாட்டின் தலைமை நீதிமன்ற ஆணையை மீறும் போது, வேறு பலரும் அந்த மன்றத்தின் தீர்ப்பை எதிர்க்கவும் புறக்கணிக்கவும் துணிவு பெற்று விடுவார்கள்.

உச்சநீதி மன்றம், தனது ஆணைகளை நிறைவேற்றுமாறு மத்திய, கர்நாடக அரசுகளை நிர்ப்பந்திக்க வேண்டும். இதற்குரிய அழுத்தத்தைத் தமிழக முதல்வர் கொடுத்துவர வேண்டும்.

சசிகலா–ஜெயலலிதா சொத்துக் குவிப்புப் பட்டியல் அம்பலமும் அரசின் சிக்கன நடவடிக்கைகளும் மக்களால் வரவேற்கப்படும்– சந்தேகமில்லை.

ஆனால், விலைவாசி ஏற்றமும் விளைச்சல் பாதிப்பும் சேர்ந்து கொள்ளும் போது, மக்களின் அதிருப்தி முழுதும் முதல்வரின் பேரில்தான் திரும்பும். இதற்கு ஆளாகாமல், தமது முயற்சிகளில் வெற்றி பெற, முதல்வரின் ஆற்றல் முழுமையாகச் செயல்படட்டும்.

# விளாசுகிறார் மேனகா காந்தி!

ஜனதா தளத்திலிருந்து ஆறுவருடங்களுக்கு சஸ்பெண்ட் செய்யப்பட்டிருப்பதன் மூலம், மேனகா காந்தி, தேசிய அளவில் கவனம் ஈர்த்திருக்கிறார். பிரதமர் தேவேகௌடா மீது பயங்கரமான ஊழல் குற்றச்சாட்டுக்களைச் சுமத்தும் மேனகாவை அவரது வீட்டில் சந்தித்தோம். மேசைக்கு அடியில் நிறைய நாய்கள் சுற்றி வந்து பயமுறுத்தியவாறே இருக்க, (14 நாய்கள் வளர்க்கிறார்!) நாம் கேட்ட கேள்விகளுக்குத் தயங்காமல் சரமாரியாக பதில்கள் வந்தவண்ணம் இருந்தது மேனகாவிடமிருந்து. அவரது மகன் வருண்காந்தி பற்றியும் சோனியா குடும்பம் பற்றியும் நாம் கேட்ட கேள்விகளுக்கு மட்டும் பேச மறுத்து விட்டார். பேட்டியிலிருந்து...

**கேள்வி:** கர்நாடக மாநிலத்தில் தேவேகௌடா அனுமதியளித்த கோஜென்ரிக்ஸ் மின் திட்டத்தினால் சுற்றுச் சூழலுக்கு மிகுந்த பாதிப்பு உண்டாகும் என்று கூறியிருக்கிறீர்கள். இதை விளக்க முடியுமா?

**மேனகா காந்தி:** இந்த மின் திட்டம் தோன்றப் போகும் இடம், அடர்ந்த காடுகள் நிறைந்த, அதிவேகமாகக் காற்று வீசும் தென் கர்நாடகப் பகுதி. பெரும்பாலும் நிலத்தை மட்டுமே நம்பி வாழும் விவசாயிகளும் மீனவர்களும் வாழும் பகுதி இது. 210 மெகா வாட் சக்தியுடன், NTPC, 1990ஆம் ஆண்டு இந்த மின் திட்டத்தை அமைப்பதாக இருந்தது. ஆனால் எல்லோரும் ஒருமுகமாக, மின் திட்டத்திற்கு இது ஏற்ற இடம் இல்லை என்று கருத்துத் தெரிவித்தார்கள். சுற்றுச் சூழல் பாதிப்புகளைப் பற்றி யோசிக்காமல், இந்தத் திட்டத்தைக் கொண்டு

## “தேவேகௌடா

வர எண்ணியது தவறு என்று உணர்ந்து, இத் திட்டத்தை அறிமுகப்படுத்திய வீரப்ப மொய்லியே இதை ரத்து செய்து விட்டார். இன்று, NTPC மின் வாங்கிய அதே இடத்தில், மின் உற்பத்தி ஆலையை (power plant) நிறுவும் பணி கோஜென்ரிக்ஸ் கம்பெனிக்கு வழங்கப்பட்டிருக்கிறது. கோஜென்ரிக்ஸ் கம்பெனி இதுவரை ஆயிரம் மெகா வாட் மின் ஆலைகளைக் கட்டியது கிடையாது. இந்தக் கம்பெனி டெண்டர் மூலம் கொண்டு வரப்படவில்லை. இக் கம்பெனிக்கு ‘அழைப்பு’ விடப்பட்டது.

இத்திட்டத்தைச் செயல்படுத்தினால் காடுகள் அழியும். இத்திட்டத்திற்கு ஒரு நாளைக்கு 77



# லஞ்சம் வாங்கியிருக்கிறார் என்றே நினைக்கிறேன்!”

மில்லியன் கியூபிக் லிட்டர் தண்ணீர் தேவைப்படும். இப்பகுதியிலுள்ள முல்கி ஆறு, விவசாயத்திற்குத் தண்ணீர் கொடுக்கிறது. இந்த ஆற்றில் பாலம் கட்டிக் கொடுத்து, அதிலிருந்து மின்திட்டத்திற்குத் தேவையான தண்ணீர் கிடைக்க வசதி செய்து தருமாறு கேட்டுக் கொண்டுள்ளது கோஜென் ரிக்ஸ் கம்பெனி. இது ஒரு நியாயமற்ற கோரிக்கை. மேலும் இந்த மின் திட்டத்திற்காகத் தினமும் 45,000 டன் நிலக்கரி கடல் மூலமாகவும், நிலம் மூலமாகவும் கொண்டு வரப்படும். அதற்குத் தேவையான ரயில் தண்டவாளங்கள், ஜெட்டி, துறைமுகம் எல்லாம் அமைக்க வேண்டும். இந்த மின் திட்டத்திலிருந்து பறக்கும் சாம்பல், (fly ash) இப்பகுதி முழுவதிலும் அமில மழையாகப் பொழியும். இது என்னுடைய கருத்து அல்ல; சுற்றுச் சூழல் செயலாளராக இருந்த எல்லப்பா ரெட்டியின் கணிப்பு இது! இவர்தான் இத்திட்டத்தை முதன் முதலில் எதிர்த்தார். அதன் காரணமாக அவர் தமது வேலையை ராஜினாமா செய்ய நேர்ந்தது. இந்த அமில மழை இங்குள்ள இறால், மீன் பிடிப்புத் தொழில்களையும், ரப்பர், கோகோ, காபி போன்ற பயிர்களையும் வெகுவாக பாதிக்கும். மேலும் இத்திட்டத்தின் காரணமாக, இந்தப் பகுதியிலிருந்து சுமார் ஆயிரம் குடும்பங்களை இடம் மாற்ற வேண்டி இருக்கும். அமில மழை, மற்றும் பல கழிவுகளின் காரணமாக இன்னும் ஓர் ஆயிரம் குடும்பங்கள் நாளடைவில் பாதிக்கப்படலாம்.

**கல்கி:** இந்த மின் திட்டம் இப்படிப்பட்ட பாதிப்புகளை உண்டாக்கும் என்று தெரிந்தும், பிரதமர் இந்தத் திட்டத்திற்கு ஏன் அனுமதி வழங்கினார்?

**மேனகா:** பணம் தான் காரணம்!

**கல்கி:** விளக்க முடியுமா?

**மேனகா:** பிரதமர் பணம் வாங்கிக் கொண்டு, அனுமதியளித்து விட்டார் என்று நான் நினைக்கிறேன். அவர், முன்பு கர்நாடக முதலமைச்சராக இருந்த பொழுது, அவர் ஒருவர்தான் இந்தத் திட்டத்தின்மேல் மிதமிஞ்சிய ஆர்வம் காண்பித்தார். என்னுடைய முதல் ஆட்சேபணை, உலகளாவிய டெண்டர் இல்லாமல், எந்த ஒரு மெகா திட்டத்தையும் நாட்டிற்குக் கொண்டு வருவது சரியில்லை என்பது. சிங்கப்பூருக்குப் போய் கோஜென்ரிக்ஸ் கம்பெனியின் தலைவரைச் சந்தித்துப் பேசிவிட்டு வந்த



உடன், இந்த மின் திட்டத்தை தேவே கௌடா அறிவித்தார். அவருடைய இந்தச் செயல் ஒன்றே அவர் மீது சந்தேகத்தை உண்டாக்குகிறது! மேலும் கோஜென்ரிக்ஸ் 4080 கோடி ரூபாய்க்கு பட்ஜெட் கொடுத்துள்ளது.

ஆனால் BHEL கம்பெனி 2000 கோடி ரூபாயிலேயே இத் திட்டத்தை அமைத்துத் தருவதாகக் கூறியது. அவர்களிடமிருந்து டெண்டர் கூடக் கேட்கப்படவில்லை! கோஜென்ரிக்ஸ் தனது செலவுகளை எக்கச்சக்கமாகக் கூட்டி பட்ஜெட் தயாரித்துள்ளது. மொத்த திட்டத்தின் செலவு 4080 கோடி ரூபாய். அதில் 30 சதம் கோஜென்ரிக்ஸ் முதலீடு செய்யும். மீதி 70 சதம் நமது நாடு செலவழிக்கும். முதலீடு செய்த நாளிலிருந்தே கோஜென்ரிக்ஸ் கம்பெனிக்கு 16 சதம் வட்டி வழங்க வேண்டும். இதற்கு மார்க்கெட்டிலிருந்தே பணம் கடன் வாங்கலாமே? அதோடு மட்டுமல்லாமல், இத்திட்டத்தினால் சுற்றுச் சூழல் பாதிப்புகள் இருந்தால், கோஜென்ரிக்ஸ் அதற்கான பொறுப்பு ஏற்காது. இப்படி எல்லா கோரிக்கைகளுக்கும் பிரதமர் உடன்பாடு தெரிவித்துள்ளார்!

"இன்டர்வியூவிலே அந்தக் கேள்வியைக் கேட்டதுமே வேலை கிடைக்காதுன்னு தெரிஞ்சு போச்சு!"
"என்ன கேள்வி அது?"
"ஐக்கிய முன்னணி கூட்டணியில் எத்தனை கட்சிகள் இருக்குது?"
— ப்ரியதர்சினி

**கல்கி:** லஞ்சத் தொகை எவ்வளவு என்று மதிப்பிடுகிறீர்கள்?

**மேனகா:** எனக்குச் சரியாகத் தெரியாது. சுமார் 500லிருந்து 600 கோடி ரூபாய் வரையில் இந்த மின் திட்டத்தின் செலவு அதிகப்படுத்திக் காண்பிக்கப் பட்டிருக்கிறது. இந்தத் தொகையிலிருந்து யாருக்கு எவ்வளவு போகிறது என்று துல்லியமாகச் சொல்ல முடியாது.

**கல்கி:** நீங்கள் இந்த மின் திட்டத்திற்கு முட்டுக்கட்டை போடுவதை கர்நாடக மாநிலத்திலுள்ள தொழிலதிபர்கள் எதிர்க்கிறார்களே?

**மேனகா:** மின் உற்பத்தி வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. ஆனால் 4080 கோடி ரூபாய் திட்டம் என்பது அதிகமில்லையா? மேலும் கோஜென்ரிக்ஸ் கம்பெனியே இத்திட்டம் நிறைவேற 40 மாதங்கள் வரையில் ஆகும் என்றும், இந்த plant 30 ஆண்டுகள் தான் தாக்குப் பிடிக்கும் என்றும் கூறியுள்ளது. மேலும் இத்திட்டத்தின் மூலம் உற்பத்தியாகும் மின்சாரம், ஒரு கிலோவாட் ரூபாய் 4.50க்கு விற்கப்படும். தற்போதைய விலையோ ரூ.2.80 தான். மேலும் கோஜென்ரிக்ஸ் 85 சதவிகிதத்திற்கு மேல் மின் உற்பத்தி செய்தால், கர்நாடக மின்சார வாரியம், கணிசமான போனஸ் வழங்க வேண்டும் என்றும் ஒப்பந்தம் உள்ளது. ஆக, தொழிலகங்கள், மின்சாரத்திற்கு ஏகப்பட்ட விலை கொடுக்கப் போகின்றன.

**கல்கி:** இந்த அரசு பதவியேற்றதிலிருந்து, தாங்கள் கட்சிக்கு எதிராகப் பல்வேறு விஷயங்களைப் பற்றி எதிர்ப்புத் தெரிவித்து வருகிறீர்கள்... ஒரு எதிர்க் கட்சி போல் வெளிப்படையாகப் பேசாமல், கட்சிக்குள்ளேயே கலந்து பேசியிருக்கலாமே?

**மேனகா:** நல்ல கேள்விதான். ஆனால், லஞ்ச ஊழல் விஷயம் கட்சிக்குள் பேசி, தீர்த்துக் கொள்ள வேண்டிய விஷயமா? தஸ்லிமுதீனை அமைச்சராக்கியதை எதிர்த்துப் பேசினேன். தஸ்லிமுதீனின் ராஜினாமா, நான் எதிர்த்தது சரிதான் என்று நிரூபித்து விட்டதே! Kick back, கொலை, கற்பழிப்பு எல்லாம் மிகப் பெரிய குற்றம். இப்படிப்பட்ட கொடுமைகளை இழைக்கும் குற்றவாளிகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவது மிகவும் அவசியம். இவற்றை எப்படிக் கட்சிக்குள் பேசித் தீர்த்துக் கொள்ள முடியும்?

**கல்கி:** சமீபத்திய பேட்டி ஒன்றில் தாங்கள் சுற்றுச் சூழல் பணிகளில் ஈடுபடுபவர் என்றும், அரசியல்வாதி என்று பெயர் வாங்கவில்லை என்றும் கூறியுள்ளீர்கள். அப்படியிருக்கையில் தாங்கள் எதற்காகத் தேர்தலில் போட்டியிட்டீர்கள்?

**மேனகா:** எனக்கு அரசியல்வாதியாகப் பெயர் கிடையாது என்று சொல்லவில்லை. அரசியல், சமூகம் மற்றும் சுற்றுப் புறச்சூழல் பணி எல்லாம் ஒன்றை ஒன்று

சார்ந்தவை. அவற்றைப் பிரித்துப் பேச முடியாது. நான் தேர்தலில் போட்டியிட்டு, பாராளுமன்ற அங்கத்தினராக ஆனது, சுற்றுச் சூழல் பிரச்னைகளுக்கு, பணிகளுக்கு ஒரு wider forum கிடைக்கும் என்ற எண்ணத்தில்தான்.

**கல்கி:** குற்றவாளிகளும், ஊழல்களும் நிறைந்த கட்சி என்று தாங்கள் குறிப்பிடும் ஜனதா தளக் கட்சியின் சார்பில் எதற்காகத் தேர்தலில் போட்டியிட்டீர்கள்?

**மேனகா:** நான் தவறு செய்து விட்டேன் என்றுதான் சொல்ல வேண்டும். எனக்கு இந்தக் கட்சியைப் பற்றி ஒன்றும் தெரியாது. நான் பெரிதும் மதிக்கும் வி.பி.சிங், எனக்கு இந்த டிக்கெட் வழங்கினார். பல ஆண்டுகளாக அதாவது என் கணவர் காலத்திலிருந்தே வி.பி. சிங் அவர்களுடன் எனக்கு நல்ல பரிச்சயம். வி.பி. சிங் ஒரு நல்ல ஓவியர். சங்கீதம், ஓவியம், கலை என்று பல்வேறு விஷயங்களைப் பற்றி நாங்கள் மணிக்கணக்கில் உரையாடுவோம். தேர்தலுக்கு முன் இந்தக் கட்சியில் உள்ள யாரையுமே நான் சந்தித்தது கூடக் கிடையாது என்று சொன்னால் நம்ப மாட்டார்கள்!

**கல்கி:** ஒரு பாராளுமன்ற அங்கத்தினர் என்ற முறையில் சுற்றுப்புறச் சூழலுக்காக எந்த வகையில் பாடுபடப் போகிறீர்கள்?

**மேனகா:** நான் ஏற்கெனவே எனது பணியைத் துவங்கி விட்டேனே! பல்வேறு துறைகளிலும் ஏகப்பட்ட லஞ்சம், ஊழல் இருப்பதைக் காண்கிறேன். மங்களூர் பகுதிகளில் இறால் மீன் பிடிப்பில் உள்ள குளறுபடிகள், புதிதாக நிறுவப்படும் மின்சாரத் திட்டங்களினால் உண்டாகப் போகும் சுற்றுச் சூழல் பாதிப்புகளைக் கண்காணிக்க இருக்கிறேன். பிரதமர் தேவேகௌடா கோஜென்ட்ரிக்ஸ் மின் திட்டத்தை விட மோசமான ஒரு மின்திட்டத்திற்கு சமீபத்தில் அனுமதியளித்துள்ளார். எதிர்த் தரப்பு வாதங்களையெல்லாம் புறக்கணித்து விட்டு, போயம்குட்டி வன விலங்கு சரணாலயத்தில் மின் திட்டம் ஒன்று அமைப்பதற்கான திட்டம் ஒன்று தீட்டியுள்ளார். இதில் உள்ள அபாயங்களையெல்லாம் வெளிச்சத்துக்குக் கொண்டு வர உழைக்கப் போகிறேன்!

புதுதில்லியிலிருந்து : **ரமாமணி சுந்தர்**

அட்டை (மேனகா) வண்ணப்படம், படங்கள்: **ரவிசங்கரன்**



''மாப்பிள்ளைப் பையன் தமிழ்க்குடிமகனோட விசிறி...''

''இருக்கட்டும். அதுக்காக, 'சரஸ்வதி'ங்கற என் பொண்ணோட பேரை, 'நான்முகன் நாயகி'ன்னு மாத்திக்கிட்டாத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு சொல்றது நல்லாயில்லே!''

– டி.என். பாலகிருஷ்ணன்



"மேடையில நடிக்கிறதுக்கும் டி.வி.யில நடிக்கிறதுக்கும் என்ன வேறுபாட்டை உணர முடியுது?"

"இப்பத்தாங்க... கொஞ்ச நாளா கல்லடி படாம நிம்மதியா இருக்கேன்..."

- திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி



''படத்துல சண்டைக்காட்சிகள் நிறைய இருக்கலாம்! அதுக்காக டைட்டிலில் என் பேருக்கு முன்னால் 'கதை, வசனம்'னு போடாம 'உதை, வசனம்'னு போடறது நல்லாயில்லீங்க.''

– பாஸு



மதுரையில் எம்.ஜி.ஆர். மன்ற மாநாடு நடந்த போது, அந்த மாநாட்டில் தன்னை அ.தி.மு.க.வின் பொதுச் செயலாளராக அறிவிக்க வேண்டும் என்று எம்.ஜி.ஆரிடம் 'அடம்'பிடித்தார் ஜெ. எம்.ஜி.ஆர். ஒப்புக் கொள்ளவில்லை. உடனே ஜெ. சென்னைக்கு பேக்-அப் ஆனார். மறுநாள் இந்த விஷயத்தைப் பற்றி மோப்பம் பிடித்த சில பத்திரிகையாளர்கள் எம்.ஜி.ஆரிடம் 'உங்களுக்குப் பிறகு கட்சிக்கு வாரிசு யார்?' என்று கேட்டார்கள். 'நான்

# கைநழுவிப்

கண்ணப்பன் போன்றவர்கள் தூக்கியிருக்கும் போர்க்கொடியால் ஜெ. எந்த அளவுக்குப் பாதிக்கப்படுவார் என்பதுதான் பலரின் கேள்விக் குறியாக இருக்கிறது....

எந்த வாரிசையும் நியமிப்பதாக இல்லை' என்று சொன்னார் எம்.ஜி.ஆர். அப்போது, கூட இருந்த பண்ருட்டி ராமச்சந்திரன், 'உங்களைத் தலைவராக ஏற்றுக் கொண்டுள்ள லட்சக்கணக்கான தொண்டர்கள்தான் உங்களுக்கு வாரிசு' என்று சொல்ல, 'இதுதான் சரி' என்று ஆமோதித்தார் எம்.ஜி.ஆர்.

தாம் உயிருடன் இருக்கும்போதே யாரையாவது வாரிசு என்று அறிவித்திருந்தால், மற்றவர்கள் அதிருப்தியடையக்கூடும் என்று எம்.ஜி.ஆர். நினைத்திருக்கலாம். ஆனால் அ.தி.மு.க. இன்று பல பிரிவாக இருப்பதைப் பார்க்கும்போது 'வாரிசு' என்று அறிவித்து விட்டுச் சென்றிருந்தால் அந்த நபர் தலைமையிலாவது கட்சி ஒன்றுபட்டு இருக்குமே என்று எண்ணத் தோன்றுகிறது.

ஏற்கெனவே, எம்.ஜி.ஆர். மன்றம் என்ற பெயரில் ஆர்.எம்.வீ. இயங்கிக் கொண்டிருக்கிறார். இப்போது ராஜாராம், அண்ணா - எம்.ஜி.ஆர். முன்னேற்றக் கழகத்தைத் துவக்கியிருக்கிறார். பண்ருட்டியார் மக்கள் நல உரிமைக் கழகத்தை நடத்திக் கொண்டிருக்கிறார். தவிர, ஜி. விஸ்வநாதன், அழகு திருநாவுக்கரசு, கோவை செழியன், ஜி.எட்மண்ட் என்று தனி ஆவர்த்தனம் செய்து கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கையும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இப்படி ஜெ. எதிர்ப்பாய் வெளியே வந்த இந்த வரிசையில் கண்ணப்பனும் சேர்ந்து விடுவாரா என்பதுதான் இப்போதைய கேள்வி!

'சசியைப் பிரிய மாட்டேன்' என்று ஜெ. சொல்லி விட்டதால் ஜெ. எதிர்ப்பு அணி ஒன்று திரள முயல்கிறது. எப்படி காங்கிரஸில்

நரசிம்மராவைப் பிடிக்காவிட்டாலும் வேறு வழியின்றி அவரைத் தலைவராக (இதுவரை யில்) ஏற்றுக் கொண்டிருக்கிறார்களோ அதே நிலைதான் அதி.மு.க.விலும். இதில் வேடிக்கை என்னவென்றால் ஜெ.வை விட்டுப் பிரிந்து வந்த தலைவர்களே ஒன்றுசேர முடியவில்லை. "தனியாக இயக்கம் கண்டவுடன் தாங்கள்தான் எதிர்கால முதலமைச்சர் என்று நினைத்துக் கொண்டு செயல்படுகிறார்கள்'' என்றார் பிரிந்து வந்த தலைவர் ஒருவர்.

"சசிகலாவை எதிர்க்கிறோம்'' என்ற பெயரில் தமக்குச் சவால் விடும் கண்ணப்பன் கோஷ்டியை நன்கு புரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார் ஜெ. எந்தக் காரணம் கொண் டும் கட்சி தமது கையை விட்டு நழுவிப் போகாமலிருக்க என்ன செய்ய வேண்டுமோ அதை யெல்லாம் செய்து கொண்டிருக் கிறார். கண்ணப்பன் ஆட்களை அடையாளம் கண்டுவைத்திருக் கிறார். காலையும் மாலையும் தொண்டர்களைச் சந்திக்கிறார்.

அதனாலேயே தற்சமயம் அமைதியாக இருக்க விரும்பு

• கண்ணப்பன்



பேசி வந்த கண்ணப்பன், தலைமையை எதிர்த்து இதுவரை எந்த அறிக்கையும் விடவில்லை.

இந்த நிலையில், தமக்கே சவால் விடுவாரோ என்று கருதி முதல் தாக்குதலாக, ஜெயலலிதா, கண்ணப்பனிடமிருந்து பொருளாளர் பதவியை யும், மாவட்டச் செயலாளர் பதவியையும் பிடுங்கி விட்டார். இதுதான் கண்ணப்பனின் கோபத்துக்குக் காரணம். ஜெவுக்கு எதிராகப் பொதுக் குழுவைக் கூட்ட ஆதரவு தேடிக் கொண்டிருக்கிறார்; சட்டமன்ற, ராஜ்யசபை உறுப்பினர்களைத் தம் பக்கம் இழுக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறார்.

இப்படிச் செய்திகள் வந்தாலும், ரிமாண் டில் இருக்கும் எஸ்.டி.எஸ். ஜாமீனில் வெளிவரும் வரை எந்த நடவடிக்கையிலும் இறங்க மாட்டார் என்று அவருக்கு நெருங்கிய வட்டாரங்கள் சொல் கின்றன. எலியும், பூனையுமாக இருந்த எஸ்.டி.எஸ்.ஸையும் கண் ணப்பனையும் தமது சசிகலா ஆதரவுப் போக்கு காரணமாக, ஒன்றாக இணைய அனுமதித் திருக்கிறார் ஜெ.

"இது ஏமாற்று வித்தை. ஆட்சி நடக்கும்போது சசிகலா

# போகிறதா கட்சி?

கிறார் கண்ணப்பன். "எந்த பத் திரிகையாளரையும் தனித்தனி யாகச் சந்திக்க விரும்பவில்லை. ஏதேனும் முடிவெடுத்தால் எல் லோரையும் கூட்டி அறிவிக் கிறேன்!'' என்று சொல்கிறார்.

"ஜெ.வையும் - சசியையும் எதிர்த்து அறிக்கைகளை சரசர வென விட்டு, ஓர் ஆர்ப்பாட்ட அரசியல் நடத்துவது அண்ண னுக்குத் தெரியாத வித்தை அல்ல. ஆனால் எதிர்காலத் தைக் கணக்கில் வைத்துப் பார்க் கும் போது, அப்படிப்பட்ட ஆர்ப்பாட்ட அரசியல் பிசுபிசுத்துப் போகும். ஆகவே அண்ணன் தீவிரமாக, தமது ஆதர வாளர்களுடன் கலந்தாலோசித்துக் கொண் டிருக்கிறார்'' என்றார் கண்ணப்பனின் நெருங் கிய நண்பர் ஒருவர்.



• அரங்கநாயகம்

தேர்தல் படுதோல்விக்கு சசிகலாதான் கார ணம் என்று தொண்டர்கள் சொல்வதையே தாமும் அரசல்புரசலாக கட்சி வட்டாரங்களில்

வுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டு விட்டு, இப்போது நடிக்கிறார்கள்'' என்று சொன்னார் இடைமட் டத் தலைவர் ஒருவர். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். ஜெ. வுக்கு ஈடாக தனி இயக்கம் நடத்தக்கூடிய வாய்ப்பு - வசதி, கண்ணப்பனிடம் இருக்கிறது.

என்றாலும் "பணவசதி இருந் தால் மட்டும் போதுமா? திருநாவுக்கரசுவுக்குக் கூட நல்ல வசதி இருந்தது. ஐந்தாறு வருடம் தனி இயக்கம் கண்டார். இப் போது நிலைமை என்ன? ஏகப்பட்ட பணத் தையும் இழந்து, கட்சியையும் நடத்த முடியா மல் 'அம்போ' என்று தலை முழுகி, அம்மாவு டன் இணைந்து விட்டாரே'' என்கிறார் ஒன்றியச் செயலாளர் ஒருவர்.

கண்ணப்பன் கலகக் கொடியை உயர்த்தி னாலும், "ஜெ. - சசிகலா போன்று அவரும் கறை படிந்த கரங்களுக்குச் சொந்தமானவர்தானே''



"சார்... உங்களுக்கு சர்க்கரை வியாதியா இருக்கலாம்! அதுக்காக சர்க்கரை இல்லாம ஒரு ஜாங்கிரின்னு கேட்டா... எப்படி சார்..."

– பி. ராஜேஷ்

என்று சொல்கிறார்கள் ஒரு சில அதி.மு.க. தொண்டர்கள். "இன்று எங்களுக்குத் தேவை ஒரு அப்பழுக்கற்ற தலைவர். அப்படி ஒரு தலைவர் கிடைக்கும் வரையில் பொறுமை காக்கத்தான் வேண்டும். இல்லையேல் கட்சி சின்னாபின்னமாகி இரட்டை இலைச் சின்னம் காணாமல் போய் விடும். பஞ்சாயத்து - நகராட்சி தேர்தல் வேறு வருகிறது" என்று எச்சரித்தார் மாவட்டச் செயலாளர் ஒருவர்.

"திருநாவுக்கரசு மிகவும் யோசித்துக் கொண்டிருக்கிறார். 'ஜெ.வை ஒதுக்கி கட்சியை வளைத்துப் போட்டு விடலாம்' என்ற அவரது எண்ணத்திற்கு இடைஞ்சலாகக் கண்ணப்பனின் போக்கு இருக்கிறது என்று நினைக்கிறார். எதிர்ப்பவர்கள் எல்லோரும் தமது தலைமையின் கீழ் ஒன்றுபட வேண்டும் என்பது அவர் விருப்பமாக இருந்தாலும் ஏதோ காரணமாக பல முன்னாள் அமைச்சர்கள் திருநாவுக்கரசுடன் இணைந்து செயல்பட விரும்பவில்லை. மேலும், தனி இயக்கம் கண்ட காரணத்தால் அண்ணா தி.மு.க.வின் மாவட்ட அளவிலான பொறுப்பாளர்களோடு பல வருடங்களாக 'டச்' இல்லை அவருக்கு" என்றும் சிலரால் சொல்லப்படுகிறது.

"ஜெ.விடம் பணம் இருக்கிறது. கட்சி இயந்திரத்தைத் தக்கவைத்துக் கொள்வார்" என்று அபிப்ராயப்படுகிறார் க. ராஜாராம். ஏற்கெனவே கட்சி பொறுப்பாளர்களிடம் செலவுக்கு என்று பணம் கொடுக்கத் துவங்கி விட்டாராராம். குறிப்பாக பொதுக் குழு உறுப்பினர்களுக்குத் தனியான கவனிப்பாம். கூடிய விரைவில் தாமே பொதுக் குழுவைக் கூட்டி கண்ணப்பன் உட்பட சில அதிருப்தியாளர்களை நீக்குவார் ஜெ. என்றும் சொல்கிறார்கள்.

"நோ... நோ... அவர் ஒரு சண்டைக் கோழி கிடையாது. ஏதாவது ஆபத்து, சோதனை என்றால் ஜகா வாங்கி விடுவார். எம்.ஜி.ஆர். இறந்த அன்று பீரங்கி வண்டியில் இருந்து இறக்கி விடப்பட்டார் அல்லவா. அந்தச் சம்பவத்தைக் கூட பொறுக்க முடியாமல் அன்றிரவு ஹைதராபாத்துக்கு பொருட்களை பேக் செய்தவர் அவர். தவிர, இரண்டு முறை அற்ப காரணங்களுக்காக 'அரசியலை விட்டு விலகுகிறேன்' என்று அறிக்கை விட்டவர்" என்று சொன்னார் பண்ருட்டி ராமச்சந்திரன்.

"ஜெயலலிதா அவர்களுக்கு அரசியலில் நன்கு செயல்பட காலம் இருக்கிறது. தமது தவறுகளை திருத்திக் கொள்வார். பத்திரிகையாளர்களிடமிருந்தும் தொண்டர்களிடமிருந்தும் ஐந்தாண்டு காலம் தூர விலகி இருந்தது தவறு என்பதை அவர் உணர்ந்திருக்கிறார். அது போல் சசிகலா பற்றிய குற்றச்சாட்டையும் அவர் உணர்ந்திருக்கிறார். பாகிஸ்தானில் முதல் முறை பேனசிர் பதவிக்கு வந்த போது, அவரது கணவரால் அவர் பெயர் ரிப்பேர் ஆனது. பின்னர் ஓர் இடைவெளி விட்டு பதவிக்கு வந்த பேனசிர், கணவரை அதிகாரத்துக்குத் தொடர்பில்லாத இடத்தில் வைத்து இப்போது வெற்றிகரமாக ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறார். அது போலவே சசிகலாவும் தள்ளி வைக்கப்படும் காலம் விரைவில் வரும். ஆனால் இதையெல்லாம் முறைப்படி அறிவிப்புக் கொடுக்காமல் மௌனமாகவே செய்வார்" என்று நம்பிக்கையுடன் சொன்னார் மூத்த அ.தி.மு.க. தலைவர் ஒருவர்.

"இது ஒரு நல்ல பலமான அஸ்திவாரம் கொண்ட கட்சி. தேர்தல் தோல்வி வரும் போதெல்லாம் அதிருப்தியாளர்கள் தலை தூக்கத்தான் செய்வார்கள். கட்சிக்கு இது சோதனைக் காலமோ, முடிவு காலமோ அல்ல! நெருக்கடியான நேரம்; அவ்வளவுதான்! தோல்விக்கான பல காரணங்களில் சசிகலா பற்றிய புகாரும் ஒன்று. அவரால் மட்டும்தான் தோல்வி என்று தொண்டர்கள் யாரும் கூறவில்லை. நான் அமைச்சராக இருந்தபோதும் சரி, கட்சிப் பொறுப்பிலிருக்கும் போதும் சரி, பலமுறை முதல்வரின் வீட்டுக்குச் சென்றிருக்கிறேன். அப்போது சசிகலாவை ஒரு முறை கூட சந்தித்தது கிடையாது. அவரோடு நேரிடையாகப் பேசியதும் கிடையாது!" என்று சொல்கிறார் தற்போது ஜெ.வுக்கு நெருக்கமாக உள்ள கே. ஏ. கிருஷ்ணசாமி.

ஆனாலும் பெரும்பாலான தொண்டர்களுக்கு, சசிகலாதான் தோல்விக்குக் காரணம் என்கிற எண்ணம்தான் இருக்கிறது. கூடவே, வருமான வரி இலாகா போன்றவை மூலமாக மத்திய அரசின் பிடியும் ஜெ.வைச் சுற்றி இறுகிக் கொண்டு வருவதால், அவரைக் கண்மூடித்தனமாக ஆதரித்தவர்கள் கூட இப்போது யோசிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அதனால் ஜெ.விடமிருந்து கட்சி நழுவிப் போனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!

- ப்ரியன்



# ஒரே விஷயம்; மாறுபட்ட கருத்துக்கள்!



சமீபத்திய 'பிலிம்பேர்' இதழில் இயக்குனர் மணிரத்னம் திரை இசையைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். நடிகர் கமலஹாசனின் பேட்டி ஒன்றும் அந்த இதழில் இடம் பெற்றிருந்தது. இரண்டில் எதை முதலில் படிப்பது என்ற ஆர்வக் கோளாறில் அதில் கொஞ்சம் இதில் கொஞ்சம் என்று படித்து வைத்தோம். அப்படிப் படித்ததால்தான் ஒவ்வொரு விஷயத்திலும் இருவருக்குமான வேறுபட்ட கருத்துக்களைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடிந்தது!

●●"நம் திரைப்படங்கள் சராசரியாக இரண்டரை மணி நேரம் காட்டப்படுவதால் நடுவே இடைவெளிகள் தேவைப்படுகின்றன. இந்த இடைவெளிகளைப் பாடல்களால் நிரப்புவது என்பது ஒரு மரபாகப் பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது."

– மணிரத்னம்.

"ஏதோ இசை நாடகம் போல் நம் திரைப் படங்கள் இருக்கும் வரையில்- பாடல்களும், நடனங்களும் அவற்றில் கட்டாயம் தேவை என்ற நிலை உள்ள வரையில், அவியலான ஒரு படைப்புக்குத்தான் நாம் முயற்சித்துக் கொண்டிருக்கிறோம்."

- கமல்

●● "ஒன்று பாடல்களே இல்லாமல் படமெடுக்க வேண்டும். இல்லையென்றால் எந்த வித அவமான உணர்வும் இல்லாமல் அவற்றைப் படமாக்க வேண்டும்."

- மணிரத்னம்

" 'இந்தியன்' படத்தின் மகன் பாத்திரம் போலவே கனவுக்காட்சிகளில் கூடக் கதாநாயகிகளுடன் ஆடுவதில் எனக்கும் ஆர்வம் ஏற்படவில்லை. ரசிகர்களைப் போலவே அந்த நடனக்காட்சிகளைப் பார்க்கும்போது எனக்கும் எரிச்சலாக இருக்கிறது."

-கமல்

●●"என்ன இருந்தாலும் நாம் திரைப் படங்களை ரசிகர்களுக்காகத்தான் உருவாக்குகிறோம். குறிப்பிட்ட ஓரிரு பாடல்களால் கவரப்பட்டு, அதற்காக மீண்டும் மீண்டும் தியேட்டரை நோக்கிப் படையெடுப்பது அவர்கள்தான்."

– மணிரத்னம்

"இசையின் தேவையை வீடியோக்கள் மற்றும் ஒலிநாடாக்கள் மூலமாகவே அடைந்து விட முடியும். அதனால்தான் 'குருதிப்புனல்' படத்தை பாடல்களே இல்லாமல் எடுத்தோம்."

– கமல்

●●"சிறு வயதிலிருந்தே நாம் பாடல்களோடு கூடிய படங்களைத்தான் பார்த்து வருகிறோம். சில சமயம் 'திருடா திருடா' படத்தில் இடம் பெற்றது போல் கதையோட்டத்தோடு கூடிய பாடல்கள் அமையும். மற்றபடி, பாடல்களைத் திணிக்க வேண்டி வரும்."

– மணிரத்னம்.

"திரைப்படப் பாடல்கள் என்பது இடைஞ்சல்தான். இந்த அவஸ்தையிலிருந்து தப்ப, ஒரு நடிகனைத் தப்ப வைக்க உணர்வுள்ள இயக்குனர்கள் முன் வர வேண்டும். 'சங்கராபரணம்' போன்ற ஒரு படம் என்றால் அது வேறு விஷயம்."

– கமல்.

தமது பேட்டியில் "ஆனந்தம்" படத்தில் தாம் நடிக்காததற்கு 'டேட்ஸ்' மற்றும் 'ரேட்ஸ்' ஒத்து வராததுதான் காரணம் என்றும், "நாயகன் பாகம் - 2" உருவாகுமா என்ற கேள்விக்கு "எனக்குத் தெரியாது. ஆனால் "இந்தியன் பாகம் - 2" உருவாகும் என்று என் உள்ளுணர்வு சொல்கிறது" என்றும் கமலஹாசன் கூறியிருக்கிறார்.

-ஜி.எஸ்.எஸ்.

பாலசந்தர் பாரதிராஜா படங்களைப் போல...!

♦ தலையங்கமோ பாலசந்தர் பட வசனம் போல் சுருக் நறுக்! அதன் மேலுள்ள கார்ட்டூன்களோ பாரதிராஜா படத்தின் விஷுவல் காட்சிகள் போல- வசனமே இல்லாமல் விளக்கும் தன்மையோடு கூடியது. இந்த தலையங்கங்களுக்கு அரசியல்வாதிகளின் மனத்தை மாற்றும் சக்தியில்லாவிடினும்- மக்களின் விழிப்புணர்வை ஊக்கப்படுத்தும் என்பது மட்டும் உறுதி!

மேல்பட்டி, எல். மாறன்.

♦ தலையங்கத்தில் கூறப்பட்டிருப்பது போல், ஹெக்டே விஷயத்தில் கௌடா ரொம்பவும் அவசரப்பட்டு விட்டார். ஒரு பெரிய ஜனநாயக அமைப்பான ஜனதா தளத்தில் முன்னெச்சரிக்கை, விளக்கம் கோரும் நோட்டீஸ் போன்ற வரைமுறைகளற்று சர்வாதிகார மனப்பான்மையுடன் நடந்து கொண்டதானது, கட்சியிலே யாவது 'சுதந்திரமாகச்' செயல் படலாமே என்று ஆசைப்பட்டது போலிருந்தது...!

மணலூர்பேட்டை, கே. பாரதி.

♦ சாதாரண, அறிமுக நடிகைகள் மட்டுமல்லாமல், அவர்களின் அம்மாக்களும், இல்லாத ஆடம்பரம் செய்யும் போது, தபு எளிமையாயிருப்பது அதிசயம்!

தஞ்சாவூர், வெ. இராதாகிருஷ்ணன்.

♦ 'மாற்றம்' சிறுகதை அருமை. தான் அதிகாரம் இழந்ததை எண்ணி, ரகுராம், கண்ணீருடன் இருப்பதைக் கண்டதும் தன் முந்தானையால் துடைத்துத் தோளில் சாய்த்துக் கொண்ட வசுதாவின் பாத்திரம் சிறந்த மனைவிக்கு ஓர் இலக்கணம்!

மதுரை - 9, வி.எஸ்.அனிதா.

♦ 'வீட்டுக்கு வரும் மருத்துவமனை' என்ற தலைப்பில் வெளியான செய்திக் கட்டுரையைப் படித்தேன். ஆபத்திற்கு உதவும் மருத்துவரைப் போல "கல்கி" இதுபோன்ற அரிய செய்திகளை வெளியிட்டுச் சேவை புரிகிறது! நன்றி.

பாளையங்கோட்டை, கு. சரவணன்.

♦ வாழ்க்கையின் நெறிமுறைகளை, யதார்த்தத்தை சூட்சமமாக, நடைமுறையோடு காட்டிய புத்த மத ஜென் கதைகள், மிகவும் அபாரம்.

திருநெல்வேலி டவுன், வீ.முத்தையா.

♦ கல்கியின் வடிவமைப்பு பற்றிய போட்டியில் பரிசு கிடைக்காவிட்டாலும், வடிவமைப்பில் மாற்றம் கூடாது என்ற என் கருத்து ஏற்கப்பட்டிருப்பதால், பரிசு பெற்ற மகிழ்ச்சியடைந்தேன்.

திருவனந்தபுரம், என்.சம்பத்.

♦ "முதியோர் இல்லங்கள்- சூப்பர் பிஸினஸ்" என்ற கட்டுரையில் (30.6.96 இதழ்) எங்கள் இல்லத்தைப் பற்றியும் எழுதியதற்கு நன்றி. ஆயினும் கட்டுரைக்குத் தரப்பட்டுள்ள தலைப்பு, சேவை மனப்பான்மையுடன் நடத்தப்படும் எங்கள் முதியோர் இல்லத்தைப் பற்றியும் மேலெழுந்தவாரியாகப் படிக்கும் வாசகர்கள் தவறாக எடை போட வாய்ப்பளிக்கிறது.

சென்னை, பாமா நடராஜன், இயக்குனர், நிம்மதி முதியோர் இல்லம்.

(கல்கி வாசகர்கள் மேலெழுந்தவாரியாக எதையும் படித்து தவறான முடிவுகளுக்கு வரக்கூடியவர்கள் அல்ல என்பதில் உறுதியாக இருக்கிறோம். - ஆர்.)

## ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

♦ கல்கி 30.6.96 இதழில் "மீனவர் வாழ்வில் தொடரும் புயல்" பற்றிய கட்டுரை படித்தேன். நான் வானிலை ஆராய்ச்சி மையத்தில் இயக்குனராக இருந்து ஓய்வு பெற்றவன். மீனவர்களுக்கு நூறு சதவிகிதம் பாதுகாப்பு அளிக்க, வானிலை விஞ்ஞானம் மேலும் முன்னேற வேண்டியிருக்கிறது. இருந்தாலும் மீனவர்களுக்கு உதவ, இப்போதுள்ளதைவிட மேலும் ஓர் அடி முன்னேற வாய்ப்பு உள்ளது. விமான தளத்தில் இருப்பதுபோல் ஒரு வானிலை குறிப்பு கொடுக்க ஒரு அலுவலகத்தை மீனவர் துறைமுகத்தில் அமைக்கலாம். மீனவர்கள் அதிகம் படித்தவர்களாக இல்லாது போனாலும் வானிலை விவரங்களைக் கூறியதும் புரிந்து கொள்ளக் கூடியவர்கள். அவர்கள் கடலுக்குச் செல்லும் முன் வானிலை விவரப்படங்களையும் செயற்கைக் கோள் புகைப்படங்களையும் காட்டி விவரித்தால் ரொம்பவும் பயன் அடைவார்கள். உதாரணமாக, ஜூன் 10,11 நாட்களில் ஒரு காற்றழுத்த தாழ்வுப் பகுதி தீவிரமாகி, அது மேலும் தீவிரமடையக் கூடும் என்ற ஒரு விவரம் அவர்களுக்குத் தெரிந்திருந்தால் புயல் எச்சரிக்கை கிடைக்க அவர்கள் காத்திராமல் தக்க சமயத்தில் திரும்பி யிருப்பார்கள்.

திருச்சி - 1, எஸ். ரங்கநாதன்.

வட்ட மேஜை




# விளையாட்டில் விளையாடும் அரசியல்!

ஜப்பானுக்கும் தென்கொரியாவுக்குமிடையே 'நீயா, நானா?' என்று ஆரம்பித்த போட்டி, இப்போது 'நாம் இரண்டு பேரும் தான்' என்ற அளவில் அடங்கியிருக்கிறது.

'2002-ம் ஆண்டு உலகக் கால்பந்தாட்டப் போட்டிகளை யார் நடத்துவது?' என்பதுதான் விவகாரம்.

இந்த விவகாரத்துக்குப் பின்னால் விகாரமான அரசியல்.

இரண்டு நாடுகளுக்கும் எப்போதுமே பங்காளிச் சண்டை. சர்வதேச கால்பந்து சங்க சம்மேளனம் கூட அரசியலுக்கு அப்பாற்பட்டதல்ல.

அதன் தலைவர் ஹாவ்லாஜ். 80 வயது. ஜப்பானுக்கு தோஸ்த். "போட்டிகளை நடத்த ஜப்பான், தென் கொரியா இரண்டு நாடுகளுமே விண்ணப்பித்திருக்கின்றன. இரண்டு நாடுகளும் கூட்டாகவே போட்டிகளை நடத்தலாம் என்று ஒரு புதிய கருத்து கிளம்பியிருக்கிறது. "அதெல்லாம் சரிப்பட்டு வராது" என்றார் அவர். உள் மனத்தில் ஜப்பானுக்கு வாய்ப்புத் தர வேண்டும் என்ற ஆசை அவருக்கு.

அவருக்குப் போட்டியாக ஜொகான்ஸன் என்பவர். சர்வதேச கால்பந்து சங்க சம்மேளனத்துக்கு, அடுத்தபடியாக இவர்தான் தலைவராக வர வாய்ப்பிருக்கிறது. தற்போது ஐரோப்பிய கால்பந்து சங்க அமைப்பின் தலைவர். 'இரண்டு நாடுகள் ஏன் சேர்ந்து போட்டிகளை நடத்தக் கூடாது?' என்பது ஜொகான்ஸன் கட்சி.

ஹாவ்லாஜ் இருக்கிறாரே, இவருக்கு பிரபல வீரர்களிடையே அவ்வளவாக நல்ல பெயர் கிடையாது. கால்பந்தாட்டத்தில் கனவுக் 'கன்னர்'களாகத் திகழ்ந்த பீலே, மாரடோனா ஆகியோரை ஏற்கெனவே பகைத்துக் கொண்டிருப்பவர்.

இரண்டு நாடுகள் சேர்ந்து நடத்தினால் செலவு பகிர்ந்து கொள்ளப்படும். நாடுகளுக்கு செலவு குறையும். இரு நாடுகளுக்குமிடையே நல்லுறவுக்கும் இந்த முயற்சி பயன்படும் என்று பல நாடுகள் இந்தக் கருத்தை ஆதரிக்கின்றன.

வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு ஜூரிச் நகரில் கூடிய சர்வதேச சம்மேளத்தின் நிர்வாகக் குழு கூட்டம் ஜப்பான் – தெ. கொரியா சேர்ந்து நடத்தச் சம்மதம் தெரிவித்து விட்டது. சம்மேளனத்தின் விதிமுறைகளில் இதற்கு இடமில்லை என்றாலும் பெரும்பான்மையின் அடிப்படையில் விதிகளே மாற்றப்பட்டு விட்டன.

இது ஒருவிதத்தில் நல்லதாகப் போயிற்று. தன் செல்வாக்கைப் பயன்படுத்தி ஜப்பான், தான் மட்டும் தனியாக நடத்த அனுமதி பெற்றிருந்தால் தென் கொரியாவுக்கு வெறி பிடித்திருக்கும். அங்கே உள்ள ஜப்பானியர்களின் வாழ்க்கை, அவர்களின் சொத்துக்களுக்கு மிகப் பெரிய அபாயம் ஏற்பட்டிருக்கும். 'நல்ல காலம்' என்று உலக அரசியல் பார்வையாளர்கள் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறார்கள்.

ஆனால் உண்மையில் இனிமேல்தான் பிரச்னைகளே! போட்டிகளை நேரடியாக ஒளிபரப்ப எல்லா டி.வி.க்களும் போட்டியிடும். அதற்கு வசூலிக்கப்படும் பெரும் கட்டணத்தை எப்படி பங்கிட்டுக் கொள்வது?

தற்சமயம் கார்கள், எலெக்ட்ரானிக் சாமான்கள் உட்பட 162 வகையான ஜப்பானிய பொருட்கள் தெ. கொரியாவுக்குள் நுழைய அனுமதியில்லை. இந்த நிலையில் டி.வி.யில் ஆட்டங்கள் ஒளிபரப்பாகும் போது ஜப்பானிய பொருட்களுக்கான வர்த்தக விளம்பரங்களை தென் கொரியா டி.வி.யில் தெரியக் கூடாது என்பது எப்படி சாத்தியம்?

உலகக் கோப்பை போட்டிகளின் சின்னத்தை யார் முடிவு செய்வது? ஜப்பானா, தெ. கொரியாவா?

தொடக்க விழாவில் ஜப்பான் அரசரும், தென்கொரியாவின அதிபரும் சேர்ந்து அமர்வார்களா? இருவரும்தான் எலியும் பூனையுமாயிற்றே?

இறுதிப் பந்தயத்தை (Finals) யார் நடத்துவது?

இதுபோன்ற பந்தயங்களின் போது போட்டியை நடத்தும் நாட்டின் தேசிய கீதம் மைதானத்தில் ஒலிக்கப்படும். இதிலோ இரண்டு நாடுகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. தன் நாட்டு மைதானத்தில் ஜப்பான் நாட்டு தேசிய கீதம் ஒலிப்பதை தென்கொரியா சகித்துக் கொள்ளுமா?

இரண்டு அணிகளிடையே கால்பந்து உதைபடுவது போல, இந்தக் கேள்விகள் இரு நாடுகளுக்கிடையே உதைபட்டுக் கொண்டிருக்கின்றன.

கோல் அடிக்கப் போவது யார்?

**– ராணிமைந்தன்**

# 10 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

தர்க்க சாஸ்திரம் கற்க ஒருவர் போனார். 'இல்லை' என்கிற சொல்லுக்கு நான்கு விதமான விளக்கம் உண்டு என்றார் ஆசார்யர். மாணவர் ஆச்சர்யப்பட்டார். அது என்ன நான்கு விதமான 'இல்லை'...?

ஒரு பானையையே உதாரணமாய் எடுத்துக் கொள்வோம். ஒரு பானை உருவாக்கப்படுகிறது. அதை நாம் 'பானை' என்று சொல்கிறோம். உருவாக்கப்படுவ தற்கு முன் அது இருந்ததோ...? இல்லை! இந்த 'இல்லை'யை பிராத பாவம் என்று சொல்வோம்.

பானை ரொம்ப அழகாக இருக்கிறது. அங்கேயிருந்து ஒரு குழந்தை வருகிறது. கையிலே ஒரு தடியோடு வருகிறது. அதை ஓங்கி, பானையை ஒரு அடி...! பானை சுக்கு நூறாகப் போயிடறது. இப்போது அந்தப் பானை இருக்கிறதா...? இல்லை!... இந்த 'இல்லை' வேறு; முதலில் பிராத பாவமாய் சொன்ன 'இல்லை' வேறு... இந்த இரண்டாவது 'இல்லை'யை விரத்வம்ஸா பாவம் என்று சொல்லலாம்.

அடுத்து அந்யோந்யா பாவம். ஒரு கடிகாரம், எனக்கு சற்று தூரத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. நான் இங்கே இருக்கிறேன். அது இருக்கும் இடத்தில் நான் இல்லை; நான் இருக்கும் இடத்தில் அது இல்லை!- இந்த 'இல்லை' அந்யோந்யா பாவத்தில் சொல்லப்படுவது.

நாலாவதான அத்யந்தா பாவத்தை ஒரு கதை சொல்லி விளக்கலாம்: பரம ஏழை ஒருத்தர். ஒரு வீட்டு வாசலில் அதிகாலையிலேயே நின்று யாசகம் கேட்டார். எட்டு மணி ஆகியும் அந்த வீட்டின் வாசல் கதவு திறக்கவில்லை. அந்த வழியே போன இன்னொருத்தர் பார்த்தார். கதவைத் தட்டி நின்றவரிடம் போனார். 'நீர் வேறு எங்கேயாவது போய் யாசகம் கேளும்; தாத்ருத்வம் என்கிறது இந்த வீட்டிலே அத்யந்தா பாவம் ஆயிற்றே...! என்றார். யாசித்தவருக்குப் புரியவில்லை. 'வள்ளன்மை என்பது முன்பும் இல்லை, இப்போதும் இல்லை, இனியும் இராது இந்த கிரஹத்தில்' என்பதே நான் சொன்னதன் அர்த்தம் என்று விளக்கம் கிடைத்தது. ஆக, நான்காவது பாவத்தில் 'இல்லை' என்று சொன்னால், எக்காலத்திலும் இல்லை என்று பொருள்.

இந்த நான்கு அபாவங்களிலே அந்யோன்யா அபாவம் பகவானிடத்திலே இருக்கிறதா...? அவன் அங்கே இருக்கிறான்; இங்கே இல்லை என்று வரையறுக்க முடியுமா...!"

பகவான் சர்வ வியாபி! உள்ளும்- புறமும்- இடைப்பட்ட இடங்களிலும் வியாபித்திருக்கிறான். இப்படி எங்கும் வியாபித்திருப்பதனாலே தான் விச்வம் என்ற சப்தத்துக்கு நாராயணன் என்று பொருள்.

இந்த வியாபித்தலைத்தான் பிரஹலாதன் நரசிம்ஹாவதாரத்திலே வெளியிட்டான். பகவானை நாடி வருந்தும்படியான ஒரு பெண்ணின் நிலையிலே - நாயிகா பாவத்திலே ஒரு பாசுரம்:

ஆடி ஆடி அகங் கரைந்து இசை
பாடிப் பாடி கண்ணீர் மல்கி - எங்கும்
நாடி நாடி நரசிங்காவென்று
வாடி வாடும் இவ்வாறுளதே..

-இதிலே எங்கும் என்பது உயிர்நாடியான சொல். 'நரசிம்ஹன் கம்பக்(தூண்) குழந்தை என்பதால் கம்பத்தை

மட்டுமே பார்க்காதே... எங்கிருந்தும் அவன் வரலாம்' என்று உணர்த்துவது.



'தத்வ விவேகோ விஷ்ணு புராணாத்' என்று விஷ்ணு புராணத்தை மிகவும் கொண்டாடிப் பேசுகிறார் ஆதி சங்கர பகவத்பாதாள். அவர் தமது விஷ்ணு சஹஸ்ர நாம பாஷ்யத்திலே, அந்த விஷ்ணு புராணத் திலிருந்து நிறைய மேற்கோள் காட்டுகிறார். அதில் ஒன்று:

உலகம் என்கிற தாமரை மலர் மலர்வதற்காக, தேவகி என்கிற கிழக்கு திக்கிலிருந்து, அச்சுதன் என் கிற சூரியன் உதித்தான்.

தேவகியை கிழக்கு திக்காகச் சொல்லி, அச்சு தனை சூரியனாகச் சொன்னதில் ஒரு தர்ம சூக்ஷ்மம் இருக்கிறது. கிழக்கு திக்குக்கும் சூரி யனுக்கும் என்ன சம்பந்தமோ அதே சம் பந்தம்தான் தேவகிக்கும் பரமாத்மாவுக்கும்.

இப்படிச் சொன்னால் என்ன அர்த் தம்...?

கிழக்கு திக்குக்கும் சூரியனுக் கும் சம்பந்தம் உண்டா? மேற்கு திக்குக்கும் சூரியனுக்கும் சம்பந்தம் உண்டா...?- யோசனை பண்ண வேண்டும்.






கிழக்கு திக்கிலே உதித்து, சூரியன் மேற்கிலே மறைவது நமக்குப் பிரத்யட்சமாகத் தெரிகிறது. ஆனால், உண்மை யிலே, ஆராய்ந்து பார்த்தால், சூரியன் தன்னுடைய மண்டலத்திலே சஞ் சாரம் பண்ணுகிறான். அவ்வளவுதான்! உலகத் திலே இருப்பவருக்குத்தான் அவன் உதிப்பதாகவும் மறை வதாகவும் தெரிகிறது.

-சாஸ்திரத்தைப் பார்க்காமலே இது கண்கூடாகவே தெரிகிறது- பாரத தேசத்திலே நமக்கு இரவு நேரமாக இருக்கிறது. அதே நேரத் திலே அமெரிக்காவிலே சூரிய னைப் பார்த்துக் கொண்டிருக்

# குறையொன்றுமில்லை

கிறார்கள்... சூரியனுக்கும் கிழக்கு திக்குக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. அதே போல, தேவகியின் கர்ப்பத்துக்கும் பரமாத்மாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை!

எங்கும் பரவியிருக்கும்படியான பரமாத் மாவை தேவகியின் கர்ப்பத்திலே அடக்கிப் பேசலாமா..!

ஒன்றை வைத்து மற்றொன்றை அடையா ளம் காட்டுவது என்பது ஏற்றுக் கொள்ளப் பட்ட மரபு. 'தடஸ்த லட்சணம்' என்று இதைச் சொல்வார்கள். ஒருத்தர் கேட்கிறார்: "இந்த ஊரில் நதி எங்கே இருக்கிறது? ஸ்நா னம் செய்ய வேண்டும்..." என்று.

அவருக்கு இன்னொருத்தர் பதில் சொல்கிறார்:

"அதோ... கூட்டமாக தென்னை மரங்கள் தெரிகின்றனவே. அங்கே இருக்கிறது நதி..." தென்னை மரத்தை வைத்து நதியின் இடம் சொன்னது போல், தேவகியின் கர்ப்பமும் 'தடம்'- அவ்வளவுதான்!

ஒரு மூதாட்டி தவறாமல் சந்திர தரிசனம் செய்யும் பழக்கம் வைத்திருந்தார். ஒரு நாள் சந்திரன் மரக்கிளை பின்னாலே இருந்தது. அவரால் பார்க்க முடியவில்லை. பேரனை அழைத்துக் கேட்டார். "அதோ பார் பாட்டி.. மரம் தெரிகிறதா? அந்த மரத்தின் நுனிக் கிளை தெரிகிறதா...? அந்தக் கிளை நுனியிலே ஒட்டிக் கொண்டிருக்கிறது பார், சந்திரன்..." என்றான் பேரன்!

உண்மையிலே சந்திரன் கிளை நுனியி லேயா ஒட்டிக் கொண்டிருக்கிறது! இல்லவே இல்லை. ஓர் அடையாளத்துக்காகச் சொல் லும் இந்த வர்ணனையைத்தான் தடஸ்த லட்சணம் என்பது.

எங்கும் வியாபித்திருக்கிற பரமாத்மாவை சங்கோசமான இடத்திலே வைத்து, 'இங்கே யிருந்துதான் அவன் வந்தான்' என்று சொல் வதும் இது போல்தான்.

ருக்மிணி பிராட்டி, கிருஷ்ணனுக்கு ஏழு சுலோகங்களை எழுதி அனுப்பினாள். அதில் ஏழாவது சுலோகமாக, 'இந்த ஜன்மாவிலே நீ எனக்குக் கிடைக்காவிட்டால், அடுத்த ஜன் மாவிலும், அதற்கடுத்த ஜன்மாவிலும், தொட ரும் நூறு ஜன்மாக்களிலும் உன்னையே அடைய தொடர்ந்து முயற்சி செய்வேன்' என்ற பொருள்பட எழுதினார்.

"நூறு ஜன்மா ஆனாலும் உன்னை விட மாட்டேன் என்றால், 'நூற்றியோராவது ஜன் மாவில் விட்டுவிடுவேன்' என்று பொருள் கொள்வதா...?"

-அடியேன் ஒரு சமயம் உபந்யாஸம் பண்ணியபோது முக்கூர் ஸ்ரீமத் அழகிய சிங்கர் இந்தக் கேள்வியைக் கேட்டார். சுவாமி (அழகிய சிங்கர்) சமத்காரமாகப் பேசக் கூடியவர். ஆதலினாலேதான் பரிசோதனை மாதிரி அப்படி ஒரு கேள்வி கேட்டார். உபந் யாஸத்தின் கடைசி தினத்தில் விளக்கம் தரு வதாகச் சொல்லி அவரிடம் அனுமதி வாங்கிக் கொண்டேன்.

நூறு ஜன்மம் என்று ருக்மிணி கணக்குச் சொல்வது எண்ணிக்கையைக் குறிக்க வந்ததில்லை... 'ஆயிரம், ஆயிரம்' என்று வேதம் சொல்வதெல்லாம் வெறும் ஆயிரம் இல்லை. 'அனேகம்' என்ற பொருளில் உப யோகிக்கப்படுகிறது 'ஆயிரம்' என்ற பதம். 'சதமானம் பவதி' (நூறு வயது சிறப்பாய் வாழுங்கள்) என்று ஆசி கூறுவதுண்டு. அப் படியானால் நூற்றியோராவது வயது வாழக் கூடாது என்றா பொருள்!? தீர்க்கமான ஆயுள் உண்டாகட்டும் என்ற உயர்ந்த பாவத்தில் ஆசி சொல்லப்படுகிறது. அவ்வளவுதான்!

'சதம்' என்பது எண்ணிக்கையைக் குறிக்க வந்ததன்று- அதைப் போலவேதான் 'சஹஸ்ரம்' என்பதும்.

விச்வத்தையே கண்களாக உடையவனை எந்த எண்ணிக்கையில் அடக்கிச் சொல்ல முடியும்...? விச்வம் எவ்வளவு பெரியதோ, அவ்வளவு பெரிய கண்களை உடையவன் அவன். நாம் அவனைப் பார்க்க வேண்டு மானாலும் விச்வத்தையே நேத்திரங்களாக்கித் தான் பார்க்க வேண்டும். ஆதலினாலேதான் விச்வ சப்தம் அவனுக்கு மிகப் பொருத்தமான பெயராக அமைந்திருக்கிறது.

இந்த ஜன்மா பூராவும் செலவிட்டாலும் 'விச்வம்' என்கிறதுக்கான அர்த்தத்தைச் சொல்லி மாளாது. இந்த ஒரு நாமாவுக்கே இவ் வளவு பெருமை என்றால் சஹஸ்ர நாமங் களின் பெருமையை நினைத்துப் பாருங்கள்!"

## விம்பிள்டனில் வென்றவருக்குப் பெண்களைப் பிடிக்காதோ!

உலகின் நம்பர் ஒன் ஸ்தானத்திலிருந்து ஒரு டஜன் இடங்கள் தள்ளியிருந்தார் கிராஜி செக். நம்பர் 13 அவருக்கு அதிர்ஷ்ட எண் போலும்! கடந்த சில மாதங்களாக இருபத்தாறு மாட்சுகளைத் தொடர்ச்சியாக வென்று வந்த பீட் சாம்ப்ராஸை இருபத்தைந்தே நிமிடங்களில் தோற்கடித்து, விம்பிள்டன் அரையிறுதிப் போட்டிக்குள் நுழைந்தார்.

கிராஜிசெக்கின் பெற்றோர்களுக்குப் பூர் வீகம் செக்கோஸ்லோவாக்கியா. கைக்குழந்தை யாக அவரைத் தூக்கிக் கொண்டு நெதர்லாண்ட் ஸில் குடியேறினார்கள் அவர்கள். சின்ன வயதி லிருந்தே டென்னிஸ் மோகம் கொண்ட கிராஜி செக்கின் மானசீக குரு ஜான் மெக்கன்ரோ. 1991 முதல் விம்பிள்டனில் பங்கேற்றாலும்

அந்தப் புல்வெளித் தளத்தின் புல்லரிக்கும் வெற்றி இவருக்கு எட்டாக் கனியாகவே இருந்தது. தொடக்க சுற்றுகளில் இம்முறை இவர் மேக்கேல் ஸ்டிச்சை தோற்கடித்தபோது தான் விமர்சகர்கள் 'அட!' என்று கவனிக்க ஆரம்பித்தார்கள்.

அதற்கு முன் இவர் கவனத்தைக் கவர்ந்தது வேறு காரணத்துக்காக! டென்னிஸ் வீராங்கனைகளை இவர், ''சோம்பேறி குண்டு பன்றிகள்!'' என்று அழைத்து வாங்கிக் கட்டிக் கொண்டார்!

சில வருடங்களுக்கு முன் நடந்த இச்சம்பவத்தை மறக்காததாலோ என்னவோ விம்பிள்டன் இறுதிப் போட்டியின்போது பார்வையாளர்களின் ஒட்டு மொத்த ஆதரவும் அமெரிக்கரான மாலிவாய் வாஷிங்டனுக்கே கிடைத்தது.



ஆனால் இதெல்லாம் கிராஜிஸெக்கை பாதிக்கவில்லை. புல்டோஸர் மாதிரி ஆடி ஜெயித்து விட்டார். ''வெற்றி பெற்ற கணத்தில் எனக்கு சந்தேகம் வந்தது. 'ஐயோ! இப்படி குதூகலிக்கிறேனே, நிஜமாகவே ஜெயித்து விட்டேனா அல்லது முட்டாள் மாதிரி கற்பனை செய்து கொண்டிருக்கிறேனோ..?' என்று...'' நம்ப முடியாமல் இன்ப அதிர்ச்சியில் பேசினார் கிராஜிஸெக்.

– ஜி.எஸ்.எஸ்.

சஹஸ்ர நாமங்களுக்கு என்ன ஒரு விசேஷமென்றால் அவை அனைத்துமே வேதத்திலே மந்திரங்களாக அமைந்திருக்கின்றன.

மந்திரம் என்று எடுத்துக் கொண்டோமேயானால், பல வகையான நிர்ப்பந்தங்கள். 'இப்படியிப்படித்தான் சொல்ல வேண்டும்' என்று நியமமுண்டு. சுவரம் மாற்றிச் சொன்னோமேயானால் அனர்த்தங்கள் ஏற்படும். எந்த சப்தத்தை அபஸ்வரமாகச் சொல்கிறோமோ அந்த சப்தமே வஜ்ராயுதமாக மாறி, சொன்னவரை அடிக்கிறது; கேட்டவரை ஹிம்சை பண்ணுகிறது!

ஒரு மந்திரத்தை சுவரம் மாற்றி உச்சரிப்பது பொய்யான வார்த்தை சொன்னதற்குச் சமமாகும்!

துவஷ்டா என்று ஒருவன் இருந்தான். குழந்தை வேண்டி, புத்ர காமேஷ்டி யாகம் பண்ண நினைத்தான். அமராவதி பட்டணத்திலேயே வைத்து இந்திரனை ஜெயிக்கக் கூடிய புதல்வன் வேண்டும் என்று அவன் விரும்பினான். அதற்குரிய யாகத்தை நடத்தித் தரச் சொல்லி புரோகிதரிடத்திலே கேட்டான்.

''மனத்திலே இந்த மாதிரி கோரிக்கையுடன் பண்ணக்கூடிய யக்ஞத்துக்கு, கர்த்தாவான நீயேதான் மந்திரத்தைச் சொல்லணும். புரோகிதனான நான் சொல்ல, நீ கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தால் பிரயோஜனமில்லை. முதலில் அந்த மந்திரத்தை அத்யயனம் பண்ணிவிடு...'' என்றார் புரோகிதர்.

''இப்போது நான் எப்படி மந்திரம் கற்றுக் கொள்வது. நீங்கள் யக்ஞத்தை ஆரம்பித்து விடுங்கள். அவ்வப்போது தேவையானதைக் கற்றுக் கொண்டு சொல்கிறேன்...'' என்றான் அவன்.

அவன் ரொம்பவும் நிர்பந்தித்ததால், வேறு வழியில்லாமல் புரோகிதர் யாகத்தை ஆரம்பித்தார். துவஷ்டா, சரியாக அத்யயனம் பண்ணாமல், சுவரம் மாற்றி மந்திரத்தை உச்சாரணம் செய்தான்.

சுவரம் மாறிப் போனதினாலே, 'இந்திரனை வீழ்த்தக்கூடிய பிள்ளை' என்பது, 'இந்திரனால் வீழ்த்தப்படக்கூடிய பிள்ளை' என்று பொருள் மாறி ஒலித்தது.

அந்த யக்ஞத்தின் முடிவிலே விருத்திராசுரன் என்ற அசுரன் உண்டாகினான். அந்த விருத்திராசுரனை இந்திரன் தன் வஜ்ராயுதத்தினாலே கண்ட துண்டமாய் வெட்டி வீழ்த்தினான்!

அக்ஷரங்களைப் போலே சுவரங்களுக்குக் கூட அர்த்தம் உண்டு என்பதற்காக இக்கதையைச் சொன்னேன். தினம் தினம் ஒருவர் ஒரு கிரஹத்துக்குப் போகிறார். 'வாங்கோ!' என்று அவரை அழைக்கும் தொனியிலேயே அது 'வாங்கோ' வா, 'போங்கோ'வா என்று அர்த்தமாகிறதில்லையா–'' அது போல்தான்! லௌகிகத்தில் அர்த்தம் மாறுகிற மாதிரி வேதத்திலேயும் மாறுகிறது.

இவ்வளவு கடினமான வேதத்தை எல்லாரும் தரிக்க முடியுமா..? முடியாது என்பதால் தான் வேத வான்மயமான சஹஸ்ரநாமத்தைச் செய்திருக்கிறது. வேதம் போல, இவ்வளவு சுவர அமைப்போடு அதைச் சொல்லணுமா? என்றால், சொல்ல வேண்டியதில்லை.

பீஷ்மர் வாக்கிலே வந்த சஹஸ்ரநாமம் சுலபமாய் உச்சாரணம் பண்ணக்கூடியது.

(தொடரும்)

# நான் மிருகமல்ல...

## நந்தன்

இரண்டு கால்களிலும் பெரிய கட்டு போடப்பட்டு இன்று எட்டாவது நாளாய் படுத்த நிலையில் இருக்கிறேன். ஆடுசதை இரண்டும் கிழிந்து தொங்கியதால் அளப்பரிய ரத்தம் வெளியேறியிருந்தது. தொடையிலிருந்து சிறிது சதையைப் பிய்த்து ஆடுசதையில் வைத்துத் தைத்திருந்தார்கள்.

தனியார் நிறுவனமொன்றில் ஷியரிங் மிஷின் ஆபரேட்டராக வேலை பார்க்கும் நான், ஒருநாள் மூன்று எம்.எம். ஷீட்டை ஷியரிங் மிஷினில் வைத்து அறுத்துக் கொண்டிருந்த போது எனது இடது கைப்பிடி லேசாய் ஷீட்டைத் தவற விட... அந்த இரும்பினாலான தட்டி அழகாய் என் ஆடுசதையைக் கிழித்துக் கொண்டு தரையிறங்கியது.

அபரிமிதமான ரத்தம் வெளியேறியதையும்... நாபிக் குழியிலிருந்து ஓங்கிக் குரலெழுப்பிய நான், அந்த நொடியிலேயே மூர்ச்சையானதையும்... அதன் பின் நடந்த மருத்துவ சிகிச்சையையும், நேற்று நினைவு திரும்பிய போதுதான் தெரிந்து கொண்டேன்.

யாரோ கதவு திறக்கும் அரவம் கேட்டு வேகமாய்த் திரும்பியதில் தொங்கிக் கொண்டிருந்த கால்கள் ஒன்றோடொன்று உரசி, வலி உச்சி மண்டையைத் தாக்கியது. வலியின் வீர்யத்தை விழுங்கத் திராணியின்றி இமைகளின் இடுக்கிலிருந்து ஆறாய் நீர் வழிய, சோகமான முனகலுடன் திரும்பவும் மல்லாந்து கொண்டேன்.

கட்டிலின் அருகில் வந்து என் நெஞ்சில் பூவாய் வருடி இதம் தந்தான் என் நண்பன் ராமலிங்கன். என் பரிதாப நிலைக்கு இரங்கியவன் சிறிது நேரம் அளவளாவி விட்டு என் கையில் ஒரு புத்தகத்தைக் கொடுத்தான். புத்தகத்தை மேலோட்டமாய்ப் புரட்டிய போது அதன் வரிகள் என்னை வெட்கம் கொள்ளச் செய்தன.

''நான் மிருகமல்ல... ஏனென்றால் எனக்கு காக்கை போல் பகிர்ந்துண்ணத் தெரியாது... ஏனென்றால் எனக்கு எறும்பு போல் சேமிக்கத் தெரியாது. ஏனென்றால் எனக்கு நாய் போல் நன்றி கொள்ளத் தெரியாது... ஏனென்றால் எனக்கு காளை போல் உடல் வருத்தி உழைக்கத் தெரியாது. ஏனென்றால் எனக்கு புலியைப் போல் பசிக்காக மட்டும் புலாலுண்ணத் தெரியாது. ஏனென்றால் எனக்கு மற்றவை போல் வம்ச விருத்திக்காக மட்டுமே உறவு கொள்ளத் தெரியாது.

புத்தகத்தின் வரிகள் என் பழைய நினைவுகளை வருடின.

சென்ற மாதம் புளியஞ்சோலைக்கு டூர் சென்றிருந்தோம். இரண்டு நாட்கள் முன்பு அறுத்துப் போட்ட பாக்டீரியாக்கள் மொய்த்த ஆட்டுச் சதை கொரிப்பதை விடுத்து, ஒரு குட்டி ஆட்டையே கொண்டு போய்... கறி சமைத்துத் தின்னலாம் என்ற முடிவோடு சென்றிருந்தோம்.

கால்கள் கட்டுண்ட ஆட்டுக்குட்டி விழிகள் வெளிப் பிதுங்கிய நிலையில் யமஹாவின் பின் சீட்டில் பயணித்து, புளியஞ்சோலை வந்தபின், இயற்கை வளங்களையும் அங்கு பெண் குட்டிகளாய் முகிழ்த்திருந்த செயற்கை வளங்களையும் ரசித்து விட்டு ஆட்டுக் குட்டியை அறுக்க உட்கார்ந்தோம்.

கத்தியின் கூர்முனை பட்டதும் தன் நான்கு கால்களை பரப்பித் தாவி ஓட யத்தனித்தது ஆட்டுக்குட்டி. கோபாலனின் கோரப் பிடியின் அழுத்தம் கால்களின் இயக்கத்தைத் தடை செய்தமையால் அதன் இயலாமை ஓலமாய் வெளி வந்தது.

குட்டி தலையைக் கீழே சாய்த்த போது என் நண்பன் ராமலிங்கனின் முகம் வெளிறிப் போயிருந்தது.

''என்ன மச்சி... ஆச்சி ஒரு மாதிரி ஆயிடுச்சி...?'' என்றான் கோபாலன்.

இப்படித்தான் நாங்கள் ராமலிங்கனை அழைப்போம். அடிக்கடி ஏதாவது பேத்திக் கொண்டிருப்பான். காரைக் காலம்மையாரையும் பரவை நாச்சியாரையும் பற்றிப் பேசி வறுத்தெடுப்பான். அதனால் அவனுக்கு செல்லமாய் நாங்கள் சூட்டிய பெயர் ராமலிங்க ஆச்சியார். எங்கள் குழுவில் அடிக்கடி வாய் கொடுத்து மாட்டிக் கொள்ளும் அவனை காய்ச்சி வடித்து விடுவோம்.

''டேய் கந்தா... இன்னொரு ஜீவனைக் கொல்றதுக்கு உனக்கு உரிமையிருக்குன்னு நெனைக்கிறியாடா...?'' என்றான் ஆச்சி.

அவ்வளவுதான். எல்லோரும் அவனைப் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டோம். அவன் வாயைக் கிளறி வேடிக்கை பார்ப்பதே தனி சுகம்.

"டேய் மாத்தூ... ஆச்சிக்கு மூடு வந்திடுச்சிடா. இப்ப ஒரு வில்லி பாரதத் தொடர் சொற்பொழிவு நிகழ்த்தும் பாரேன்," என்றான் கோபாலன்.

"ஏய்... மைக்கை இப்படிக் கொண்டா... ஆச்சி அடிகளாரிடம் காமி... கைக்கு அணைவா ஒரு டேபிளைப் போடு... நமப் பார்வதீ பதயே...!"

"ஹர ஹர மஹாதேவா..." என்று ஓலமிட்டது கும்பல். கோரஸாய் குரலெழும்பியவுடன் இடிச் சிரிப்பு எங்களுள் புரண்டது.

"மச்சி... பாகவதர நா இப்ப அறிமுகப்படுத்திடறேன். சிங்கப்பூர், மலேஷியா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கு சொற்பொழிவாற்றச் சென்று, பிறகு அதிகமான வயிற்றுக் கடுப்பால் சொற்பொழிவைத் தொடர முடியாமல் பாதி யிலேயே இந்தியா திரும் பிய ராமலிங்க ஆச்சியார் இப்போது பேசுவார்..." - இது ரகு.

கெக்கலிச் சிரிப்பு விண்ணை முட்டியது.

ராமலிங்கனுக்கு எதுவுமே காதில் விழவில்லை. ஆட்டுக்குட்டியின் சாவு அவனை ரொம்பவும் விசனப் படுத்தி விட்டது போலும். ஏதோ தனக்குள்ளே முணு முணுத்தான்.

"டேய் கூமுட்டை... என்னடா ஏதோ நீயே முணு முணுத்துக்கறே. சத்தமா சொல்லுடா. நாங்களும் அருள்பெற வேண்டாமா...?"

"ஓய் என்னப்பா நீ, ஆச்சியாரைப் போய் கூமுட்டை அது இதுன்ற! ஒரு மருவாதி வேணாம்...?"

"யப்பா கூமுட்டைன்னா என்னன்னு தெரியுமா... உள்ளார மஞ்சக்கரு இல்லாத முட்டைய கூமுட்டைன்னுவாங்க. அதாவது உள்ளார ஒண்ணுமேயில்லாத ஆளு... அதாவது

மூளையில்லாத ஆளு கூமுட்டை, புரியுதா..."

"அப்...ப நீ, நம்ப ஆச்சியாருக்கு உள்ளாற ஒண்ணுமில்லங்குறியா...?"

"ச்ச... ச்ச... நம்ம ஆச்சியாரைப் போய் அப்படிச் சொல்லுவேனா...? நம்ப ஆச்சி கூமுட்டை கெடையாதுப்பா... ஏன்னா, அவருக்கு உள்ளாறயும் ஒண்ணுங் கெடயாது. வெளியயும்..." மூர்த்தி முடிக்குமுன் சிரிப்பு வெடிகள் சடசடத்தன.

"தன்னூண் பெருக்கத்தான் பிறிது ஊனுண்பான் எங்ஙனம் ஆளும் அருள்?" என்று சத்தமாகவே முணுமுணுத்தான் ராமலிங்கன்.

"ஐயா... நீங்க உருது மொழில பேசினாக்க இந்தப் பாமரனுக்கு எப்படிங்க புரியும்... கொஞ்சம் தமிழ்லயே சொல்லுங்க புலவரே."

ராமலிங்கன் அமைதியாகவே சொன்னான். "ஏ... மனுஷன், நெறய மிஷின்... பஸ்... கார்... எல்லாம் கண்டுபிடிச்சிருக்கான். எல்லாத்துலயும் அவன் சிரமப்பட்டு கொண்டுட்டு வர்ற விஷயம் என்ன தெரியுமா...? அவன் எதை அச்சில் பண்ண விழி பிதுங்கி நிக்கறான் தெரியுமா...? மூவ்மென்ட். ஆமா. தானியங்கி. ஒவ்வொண்ணும் தானா இயங்கணும். ஃபேன் தானா சுத்தணும். ஆக்ஸிலேட்டரை அமுக்கினா பஸ் தானா ஓடணும். பெரிய பெரிய அணைகள்ல தண்ணிய தேக்கி வெச்சு அதனோட பொட்டன்ஷியல் எனர்ஜிய டர்பைனை சுத்தறதுக்கு உபயோகப் படுத்தறான். ஏன் தெர்மல் எனர்ஜியோ, எலக்ட்ரிகலோ... இல்ல நியூக்ளியரோ, இதனோட அவுட் புட்லேர்ந்து அவன் பிழிந்தெடுப்பது மூவ்மென்ட்.

"இந்த மூவ்மென்ட்டுக்கு வேண்டிய மூல எனர்ஜி... அந்த ஆட்டுக் குட்டிக்குள்... நீ இப்ப கொன்னியே, அந்த ஆட்டுக்குட்டிக்குள் இருந்தது. ஏதோ ஒண்ணு, இயற்கை... அந்த மூல எனர்ஜியை அந்த ஆட்டினுள் சிருஷ்டித்து வைத்திருந்தது. அதை அழிக்க நீ யார்...? எவ்விதமான பட்டா உண்டு உனக்கு, அதை அழிக்க...? எப்படி... எப்படி... எனக்குப் புரியவில்லை.



"அந்த ஆட்டுக்குட்டியின், நாலு கால் பாய்ச்சி துள்ளி ஓடும் ஓட்டத்தை நிறுத்திய உன்னால் அதை மீண்டும் குதித்தோட வைக்க முடியுமா...? ஆக்கத் தெரியாத கோழைக்கு அதை அழிக்க மட்டும் எப்படி உரிமை உண்டு...? நீ செய்தது உரிமை மீறல். தவறு. கூடாத செயல்..." ராமலிங்கன் உணர்ச்சிப் பிழம்பாயிருந்தான்.

அவனது பேச்சு எங்களுக்கு சலிப்புத்தட்ட ஆரம்பித்தது.

"ஏய் என்னப்பா, இதுக்குத்தான் ஆச்சியக் கௌறி விடாதேன்னேன். இப்பப் பார் டூர் மூடையே கெடுத்துருவான் போலிருக்கு..." என்றேன்.

அவனை அனைவரும் மறுதலித்து, சமையலில் இறங்கி விட்டோம். துண்டாய் நறுக்கிய சதையை நன்றாய் வேக வைத்து.. உப்பு புளி காரம் சேர்த்து, மசாலா அரைத்து விட்டு... லவங்கப் பட்டையை மணம் சேர்க்கக் கிளறி, கொதி வந்து இறக்கியதில் அதன் வாசம் அனைவரையும் கண்டிழுத்தது.

இவ்வளவு நல்ல சுவையை உணராத ஆச்சியை நினைத்துப் பரிதாபம் கொண்டேன்.

"டேய்... ஒரு உண்மை தெரிஞ்சவன் கறி சாப்புட மாட்டான்றாருடா வள்ளுவர்," என்றான் ராமலிங்கன்.

மீண்டும் சீண்ட எண்ணி அவனை நிமிர்ந்து பார்த்தபோது...

"நீ சாப்புடுறியே அது இன்னொரு உயிரோட புண்ணுடா புண்ணு. நா சொல்லல, வள்ளுவர் சொல்றாருடா..." என்று அக்ஷர சுத்தமாய் அழுத்திச் சொன்னான் ராமலிங்கன்.

அடுத்த பாகத்தை வாயில் வைத்து சுவைக்கப் போன எனக்கு அவனது வார்த்தை சுரீரென்று உச்சி மண்டையைத் தாக்கியது. அருவருப்பு தோன்றியது.

### "மூப்பனார் தேசத்து ராஜா!"

தஞ்சைக்கு வரும் வட நாட்டு சாதுக்கள்– பிரமுகர்களை, மூப்பனார் குடும்பம், அன்போடு வரவேற்று உபசரித்துப் பேரும் புகழும் ஈட்டியிருந்தது. இந் நிலையில் சரபோஜி மகாராஜா, தமது பரிவாரங்களுடன் காசியாத்திரை செய்தார். போகும் வழியெல்லாம் மக்கள், என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா? "இதோ இவர்தான் மூப்பனார் தேசத்து ராஜா!" என்று சரபோஜியை சுட்டிக் காட்டி பேசிக் கொண்டார்களாம். தமது குடிமகனுக்கு இருக்கும் புகழ் தமக்கு இல்லையே என்று வெட்கிய சரபோஜி, தஞ்சை திரும்பியதும் நிறைய அறப் பணியில் ஈடுபட்டார்.!

ஆதாரம் : உ.வே. சாமிநாதய்யர் எழுதிய "நினைவு மஞ்சரி"

தகவல் : ஆர்.எஸ்.ராவ்

அடுத்த க்ஷணத்தில் தொப்புள் குழிக்குள் முகிழ்த்த சீற்றம் உச்சி மண்டைக்குள் "சரக்" கென்று பாய்ந்து, கைகளிரண்டையும் பரபர வெனப் பற்றியது. ரத்த நாளங்களில் சூடாய்ப் பாய்ந்த ரத்தத்தில் அழுத்தம் அதிகமாக... அதனால் விழி ஓரங்கள் தணலாய் எரிய, ராமலிங்களின் சட்டையைக் கொத்தாய்ப் பற்றினேன். சட்டைப் பித்தான்கள் நாலாபுறமும் சிதற.. உடம்பின் சூடு தணியும் வரை அவனை துவம்சம் செய்தேன். என் எதிர்பாராத தாக்குதலால் நிலைகுலைந்தான் ராமலிங்கள். மீண்டும் நான் முஷ்டி மடக்கிக் குத்தியதில் உதடுகள் கிழிந்து, ஓரத்தில் ரத்தம் வெள்ளமாய் வெளிப் பெருக, மூர்ச்சையாகி, மல்லாக்கச் சரிந்தான் ராமலிங்கள்.

**அ**ன்று என் சீறலுக்கு ஆட்பட்டு சின்னாபின்னமான ராமலிங்களின் பஞ்சு போன்ற கைவிரல்கள் இன்று என் நெஞ்சில் மெலிதாய் வருடி இதம் தருகிறது.

"ராமு.. என் ஆடுசதையிலிருந்து ரத்தம் வெள்ளமாய்ப் பொங்கின போது மரண ஓலம் போட்டுருக்கேன்டா.." என்றேன்.

ராமலிங்கள் மௌனமாய் நின்றிருந்தான். அன்று புளியஞ்சோலையில் ஆட்டுக்குட்டியின் தொண்டைச் சதை கிழிபட்ட போது, அது எழுப்பிய ஓலம் பற்றி அவன் ஏதும் கேட்கவில்லை.

"டேய்.. நா அடிபட்டுத் துடிச்ச போது என்னைத் தூக்க வந்த ஒருத்தரைப் பந்து போல் சுழற்றி எறிஞ்சிருக்கேன்டா..." என்ற போது,

நாங்கள் ஆட்டை அறுத்த சமயம் அது திமிற முடியாவண்ணம் அதன் நான்கு கால்களையும் கோபாலன் அழுத்திப் பிடித்தது பற்றி அவன் ஏதும் வாய் திறக்கவில்லை.

"சிகிச்சை முடிந்து ரெண்டு நாளாகியும் பிணம் போல் இருக்கேன்டா..." என்றேன்.

ராமலிங்களின் விழிகள் மௌனமாய் என்னை நோக்கின. அந்தப் பார்வையின் ஜ்வாலையை எதிர்கொள்ளத் திராணியின்றித் தலைகவிழ்த்தேன்.

"ராமு... நா முடிவு செஞ்சுட்டேன்டா. இனிமே நா கறி சாப்புடப் போறதில்ல... நிச்சயமா. ஓர் உயிரக் கொல்றதுக்கு, அதன் இயக்கத்தை நிறுத்தறதுக்கு எனக்கு உரிமை உண்டா... இடையாதான்னெல்லாம் எனக்குத் தெரியலை. அது பத்தி உன்னோட வியாக்யானமெல்லாம் எனக்குப் புரியல. ஆக்கத் தெரியாத நான் அழிக்கலாமான்றதெல்லாம் என் புத்திக்கு எட்டல. ஆனா என்னால ஒரு ஜீவன் துன்பப்படக் கூடாது.

"இன்னொரு ஜீவன் கழுத்து அறுபட்டுத் துடிப்பதை என்னால இனி பார்த்துக் கொண்டிருக்க முடியாது. அதுக்கு நா மறைமுகமாக்கூட காரணமாகப்படாது. எனக்கு என் சதை கிழிந்து தொங்கிய போதுதான் இன்னொரு ஜீவனின் வலி புரிந்தது. என் ரத்தம் வெளிப் பொங்கிய போதுதான் ரத்தம் கசிவதன் துயரம் புரிந்து கொண்டேன். மாட்டேன்... மாட்டேன்..." ராமலிங்களிடம் மௌனமாய்க் கதறினேன்.



''நீங்க உங்க் மனைவிக்கு கணக்கு சொல்லணும்ங்கிறது உண்மையா இருக்கலாம்; அதுக்காக லஞ்சத்துக்கு ரசீதெல்லாம் தர முடியாது சார்!"

- சீர்காழி வி. ரேவதி

**வி**ஞ்ஞானத்தின் வளர்ச்சியா அல்லது என்னுள் எழுந்த கிளர்ச்சியா தெரியவில்லை. மூன்றே மாதத்தில் யமஹாவில் அறுபது நொடிகளில் தொண்ணூறு கிலோ மீட்டர் வேகத்துக்குப் பழகி விட்டேன். ஆடுசதை 'கின்'னென்று இருக்கிறது. கைகள் பரபரவென்றும் புஜங்கள் கினவு கொண்டும் திரிகின்றன.

எங்கள் நண்பர் குழு முக்கொம்பு விரைந்து கொண்டிருக்கிறது. ஆர்ப்பாட்டமாக நாங்கள் ஆச்சியைக் காய்ச்சிக் கொண்டே செல்கிறோம். என் வண்டியின் பின்சீட்டில் ஒரு வெள்ளாட்டுக் குட்டி கயிறுகளால் கட்டப்பட்டு விழிகள் வெளிவிழும் நிலையில் ம்... மே.. ம்..மே.. என்ற அலறலுடன் பயணம் செய்கிறது.

நானும் இரண்டு வாரம் முயன்று பார்த்தேன். முடியவில்லை. ராமலிங்களிடம் கதறிய கதறல் காற்றோடு போயிற்று. துக்கம் பீடிக்கும் போது தெளிவு கொள்ளும் மனிதன் இன்பம் சூழும் சமயம் கலங்கிய குட்டையாகி விடுகிறான். ஒன்று மட்டும் சர்வநிச்சயமாய்த் தோன்றியது.

நான் மிருகமல்ல.. அதனிலும் கீழான மனிதன்.

# நீங்கள் கேட்டவை - தராசு

● *ரமேஷ் ராமன், செங்குன்றம்.*

? மத்திய அரசு டீசல் விலையை மட்டும் குறைத்திருப்பது பற்றி...?

! ஒட்டகத்தின் முதுகில் ஏகச் சுமையை ஏற்றினால் அது சண்டி பண்ணும். ஒரே ஒரு மூட்டையை மட்டும் அதன் கண்ணெதிரே இறக்கிப் போடுவார்கள். உடனே அது எழுந்து ஓடுமாம்! அந்தக் கதைதான் இந்த விலை குறைப்பும்! உண்மையில் டீசல் விலையை அரசு குறைக்கவில்லை. பதினைந்து சதம் உயர்த்தியிருக்கிறது! அதற்கேற்ப எல்லா விலைவாசிகளும் உயர்ந்து கொண்டே இருக்கின்றன.



• உயர்வார்!



• 'பகவத் கீதை'

# சசிகலா கீதை படிக்கிறாரே?

● *குப்பு க.ஆ. பொன்னுசாமி, சென்னை - 10.*

? எக்மோர் நீதிமன்றத்தில் சமீபத்தில் நடைபெற்ற வன்முறைச் செயல் எதைக் காட்டுகிறது..?

! ரௌடி கும்பல்களிடையே விரோத வன்மம், பழிவாங்கல் மிதமிஞ்சிப் போயிருப்பதை. நீதிமன்ற வளாகங்களின் பாதுகாப்புக்கு மாண்பமை நீதிபதிகள் செய்துள்ள சிபாரிசுகளை மாநில அரசு உடனடியாக அமுல்படுத்த வேண்டும் என்பதை.

● *ஜெ. கண்ணன், சென்னை - 101.*

? எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்று சொல்பவர்கள் சன் டீ.வி.யின் பெயரை சூரியன் தொலைக்காட்சி என்று மாற்றுவார்களா...?

! சூரியன் என்பது சம்ஸ்கிருதம். 'பரிதி' தொலைக்காட்சி என்பதே சரி. ஆனால் போணியாகாதே! அரசியலிலும் வியாபாரத்திலும் வேறு வேறு நியாயங்கள்.

● *வி. சத்தியப்ரியன்; சென்னை - 15.*

? 'அ.இ.அ.தி.மு.க. சிதறு தேங்காய் போன்று சிதறிப் போய்விட்டது. இனி அதை ஒட்ட வைக்க முடியாது..' என்று பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியுள்ளது பற்றி...?

! கட்சியைக் கலைத்தே விடலாம். அவ்வாறு செய்ய முடியாமல் இருப்பதற்கான காரணம் கட்சிக்கு முறைகேடாகத் திரட்டப்பட்டுள்ள ஏரான சொத்துக்கள். சிதறுண்ட துண்டங்கள் ஒவ்வொன்றுக்கும் அந்தச் சொத்துக்கள் மீது ஒரு கண்!

● *உ. ஜஹ்பர் மதினா பேகம், அரியநாயகிபுரம்.*

? சமையல் எரிவாயுவுக்கு ஒரேயடியாக முப்பது சதவிகிதம் விலை ஏற்றிவிட்டார்களே? தாய்க்குலத்தின் முணுமுணுப்பு உங்கள் காதில் விழுகிறதா...?

'தாய்க்குலத்தின் முணுமுணுப்பு மட்டுந்தானா? தந்தைக் குலத்தின் வயிற்றெரிச்சலுடன் கூடிய வசை மொழிகளும் சேர்ந்து அல்லவா கேட்கிறது.

● *ஆர்.சி.முத்துக்கண்ணு, திருத்தியமலை.*

? ஜெயிலில் சசிகலா பகவத்கீதை படிக்கிறாராமே...?

! சைத்தான் வேதம் ஓதுகிறது!

● *ஆர்.கே. மதியழகன், கரடிப்பட்டி.*

? தமிழகத்துக்கு ஆறு மத்திய அமைச்சர்கள் கிடைத்திருப்பது எதனால்...?

! தேவே கௌடாவுக்கு முட்டுக் கொடுப்பதற்குத்தான்; மேலும் அதிக எம்.பி.க்களைத் தேர்வு செய்து அனுப்பி, கூட்டணியில் இடம் பெறும் இரு முக்கிய கட்சிகள் தமிழகத்துக் கட்சிகள்தானே.

● *ஜி. கருணாகரன், கடலூர்.*

? தீவிரமான தொண்டர்கள் உள்ள ஒரு கட்சி எளிதாக மக்கள் செல்வாக்கைப் பெறுமா?

! மக்கள் செல்வாக்கு, தொண்டர்களால் வருவதல்ல, செய்யும் தொண்டுகளால் வருவது!

● *வி. முத்தையா, திருநெல்வேலி.*

? செக்ஸ் கல்வி, நமது கலாசாரத்துக்கு

அவசியம்தானா...?

! என்னைப் பொறுத்தவரை இதெல்லாம் உருப்படாமல் போவதற்கான வழி. இருக்கிற உப்பு சப்பில்லாத பாடங்களை விலக்கி, தொழிற்கல்விக்கு அதிக முக்கியத்துவம் தந்தால், அது நிஜமான அக்கறையின் வெளிப்பாடு.

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? ஜெயலலிதாவின் கட்டளையை ஏற்றுச் செயல்பட வேண்டும் என்கிறாரே கே.ஏ.கே? உங்கள் கருத்து...?

! கே. ஏ. கே.யின் கட்டளையை ஏற்க வேண்டாம், என்பதே!

● மு.இரவிச்சந்திரன், சேலம்-9.

? ஜெ. கன்னித் தீவு சென்றாலும் சி.பி.ஐ. அவரை விடாது என்கிறாரே எஸ்.ஆர்.பி.?

! கன்னித் தீவு போல் கேஸூம் முடிவின்றி இழுத்துக் கொண்டு போகாமல் இருந்தால் சரி.



"உடைந்த தேங்காய்!"

● சி. கொ.தி.முருகேசன், கோபி.

? நபிகள் நாயகம் பிறந்த நாளின் போது மீலாது ஊர்வலம் வேண்டாம் என்று ஆற்காடு இளவரசர் அறிக்கை விடுத்துள்ளது பற்றி...?



• பா.ஜ.க.வில்...

! இளவரசரிடமிருந்து சமீப காலமாக வரவேற்கத்தக்க யோசனைகள் வருகின்றன. பாபர் மசூதி இருந்த இடத்தில் பொது மருத்துவமனை கட்டலாம் என்றார். இப்போது மீலாது ஊர்வலம் வேண்டாம் என்கிறார். ஹிந்து முன்னணியினரோ ஊர்வலத்தில் எத்தனை ஆயிரம் பிள்ளையார்கள் என்று கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

● ஆ. திருவாசகமணி, கருமத்தம்பட்டி.

? சசிகலாவின் கணவர் நடராஜன் பா.ஜ.க.வில் சேரப்போவதாக அறிவித்துள்ளாரே?

! ஐயோ! பாவம், பா.ஜ.க.!

● ச. உலகப்பன், கொத்தமங்கலம்.

? பாடலாசிரியர் பழனிபாரதி கவனத்தைக் கவருகிறாரே...?

! கொஞ்சம் வைரமுத்து சாயல் அடிப்பதைத் தவிர்த்துக் கொண்டால் எங்கேயோ போய் விடுவார்!



• 'கன்னித் தீவுக்கே...'



• கட்டளை!

● வடவள்ளி ராமசுப்ரமணியன், கோவை-14.

? சாடிலைட் டீ.வி.களில் வரும் 'நீங்கள் விரும்பிய பாடல்' நிகழ்ச்சிகளில், பாடல்கள் காண்பிக்கும் முன் ரம்பம் மாதிரி விளக்கம் அளிக்கிறார்களே...? அது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! விளக்கம் மட்டுமா ரம்பம்? 'ஐ டோன்ட் நோ டாமில்' என்று பெருமையாய்ச் சொல்லிக் கொள்ளக்கூடிய பெண்களை நிகழ்ச்சி ஒருங்கிணைப்புக்கு அழைத்து வந்து, அவர்கள் உச்சரிப்பையும் கேட்க வைக்கிறார்களே...! டபுள் ரம்பம் போங்க!

● அ. ஷண்முகசுந்தரம், சென்னை - 64.

? காயத்தை ஆற்ற மஞ்சளைப் பயன்படுத்துவதற்கான வணிக உரிமையை ஓர் அமெரிக்க ஸ்தாபனம் பெற்றுள்ளதே.

! நூறு ஆண்டுகளுக்கு முன்பே மஞ்சள் மகிமை நமக்குத் தெரிந்திருந்தும் விஞ்ஞான ரீதியில் அந்த மருத்துவ குணத்தைப் பிரித்தெடுத்துப் பக்குவப்படுத்தும் முயற்சியை நாம் மேற்கொள்ளவில்லை. அமெரிக்கர்கள் முந்திக் கொண்டு விட்டார்கள்!

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

? 'கற்பழிப்பு புகார் கூறப்பட்டுள்ள மத்திய உள்துறை ராஜாங்க மந்திரி தஸ்லிமுதீனை டிஸ்மிஸ் செய்ய வேண்டும்' என்று காங்கிரஸ் கட்சி வற்புறுத்தியுள்ளது பற்றி...?

! அதற்கு அவசியமின்றி அவரே ராஜினாமா செய்து விட்டார். ஒருத்தரை அமைச்சராக நியமிக்கும் முன், அவர் தொடர்பான ரகசிய அறிக்கைகளை சி.பி.ஐ. மற்றும் போலீஸ் உதவியுடன் பெற்று ஆராய வேண்டியது பிரதமரின் கடமை. மாறாக லல்லு பிரசாத் யாதவ் கட்டாயப்படுத்தினார் என்பதற்காக தஸ்லிமுதீனுக்கு அமைச்சர் பொறுப்புத் தந்தது மாபெரும் தவறு. லல்லு பேரிலேயே கூடை கூடையாகக் குற்றச்சாட்டுகள் உள்ளனவே!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்:
ஜெ. கண்ணன்,
246, பதினோராவது தெரு,
அண்ணா நகர், (மேற்கு)
சென்னை - 600 101.

**கா**கித வாசனையில் சுபா விழித்துக் கொண்டாள்.

தலைமாட்டில் அடுக்கி வைத்த பத்திரிகைகள். மேலேயிருந்த 'பம்பாய் டைம்ஸில்' புதிய பிரதமரின் ஜாக்கிரதையான சிரிப்பு. எடுத்துப் புரட்டினாள்.

குளிராக இருந்தது.

எழுந்துபோய் ஏர்கண்டிஷனரை நிறுத்தி விட்டு வந்தபோது, நடை ஒரு பக்கமாகச் சாய்ந்து இருந்தது.

நல்லவேளை... அம்மா உயிரோடு இல்லை, இதைப் பார்க்க. சின்ன வயதிலேயே நாட்டியம் சொல்லிக் கொடுத்த அம்மா... நடக்கச் சொல்லிக் கொடுத்த அம்மா...

"சுபா.... உன்னோட நடையிலே உன்னோட பெர்சனாலிடியே தெரியணும்... நேரா.... நளினமா... சாயாம.... கால் கோணாம... தினம் தலையிலே புத்தகத்தை வச்சுக்கிட்டு அது கீழே விழாம நடந்து பழகு...."

சாரி அம்மா... நீ கற்றுக் கொடுத்த அழகான நடையைத் தொலைத்துக் கொண்டு இருக்கிறேன்... நடையை மட்டும்தானா...

படுக்கையில் விரிந்து கிடந்த பத்திரிகைப் பக்கத்தில், அரிவாளும் கையுமாக உருட்டி விழிக்கும் சுபாவின் புகைப்படம். துர்க்கா தேவியாக நடிக்கும் சுபா.

கட்டிய புருஷனையும், அவன்கூடப் பிறந்தவர்களையும் தூங்கிக் கொண்டிருக்கும் போதே துடிக்கத் துடிக்க அரிவாளால் வெட்டிக் கொன்று ஜெயிலுக்குப் போன கிராமத்துப் பெண் துர்க்காதேவி.

"ரங்னேகர் ஓஹோன்னு எழுதியிருக்கார் அண்ணி, உங்க 'சிறைப்பறவை' நாடகத்தோட நூறாவது பெர்பார்மென்ஸ் பத்தி..."

ஷியாமனி தேநீர்க் கோப்பைகளோடு உள்ளே வந்தாள்.

"சுபா மேடையில் துர்க்காதேவியாகவே சுவாசிக்கிறார்... அந்த கிராமத்துப் பேச்சும், தெறித்து விழும் வசவுகளும் சாய்ந்த நடையும்... ஆயுசுக்கும் சுபாவின் பெயர் சொல்ல இந்த நாடகம் ஒன்றே போதும்..."

"எகனாமிக் வோர்ல்ட்லே தான் நம்பியார் கடிச்சுத் துப்பியிருக்கிறார்..."

ஷியாமனி சொல்லியபடி தேநீர்க் கோப்பையை நீட்ட, சுபாவின் வாயிலிருந்து மராத்தி வசவொன்று விழுந்தது.

"சாரி ஷியாமனி... துர்க்கா மாதிரி மேடையிலே நடந்து பழகிப் பழகி, என்னோட வழக்கமான நடையே மாறிப்போச்சு... இப்ப பேச்சும்... மேடைக்கு வெளியே கூட நான்



# கூடு விட்டுக் கூடு

இரா. முருகன்

துர்க்கா தேவியா மாறிடுவேனோன்னு பயமா இருக்கு... லீவ் இட்... நம்பியார்... நாடகத்தைப் பற்றி என்ன தெரியும் நம்பியாருக்கு?"

சுபா கண்ணை மூடியபடி தேநீரை உறிஞ்சினாள்.

நம்பியார்... ரத்தனின் உயிர் நண்பர்... சுபாவை அவனுக்கு அறிமுகப்படுத்தியவர்...

"மீட் மிஸ் சுபா.... ரத்தன்... நீ எப்படி கட்டடக்கலையிலே பெரிய கொம்பனோ, அதே போல சுபா கட்டட அழகுக்கலையிலே எக்ஸ்பர்ட்.... கூடவே பரதநாட்டியம் டான்சர்... தூதர்ஷன்லே வயசான மாமிகளோட ஒரு ஓரமா நின்னு ராத்திரி நியூஸுக்குப் பிற்பாடு ஆடியிருக்கா..."

பற்றிக் குலுக்கிய ரத்தனின் கை விலகிப் போய்விட்டது. பரதநாட்டியம் மறந்து கொண்டு வருகிறது. துர்க்காதேவிதான் காரணம்.

சுபா டைம்ஸை மடித்து டீப்பாயில் வைக்கும் போது, கடைசிப் பக்கத்தில் பெண்ணுரிமை இயக்கங்களின் கூட்டு மாநாட்டில் துர்காதேவி உரை நிகழ்த்தும் படம். அசல் துர்க்காதேவி.

ஷியாமளி பத்திரிகையைப் பிடுங்கிப் பார்த்தாள்.

"அசப்பிலே உங்க மாதிரியே இருக்கா அண்ணி இந்த துர்க்காதேவி. இல்லே நீங்கதான் அவ மாதிரி இருக்கீங்களா... அந்த முகத்தைப் பார்த்தா கொலை செஞ்சுட்டு, ஏழு வருடம் ஜெயில்லே இருந்த மாதிரியா தெரியுது?"

சிறைத்தண்டனை விலகி விடுதலையாகி பம்பாய் வந்திருக்கிறாள் துர்க்காதேவி. பொது மன்னிப்பு.

"நாளைக்கு உங்க நாடகம் பார்க்க வரப் போறா இல்லே துர்க்காதேவி... மேடையிலே உங்க நடிப்பைப் பார்த்தா தன்னையே கண்ணாடியிலே பார்த்துக்கிட்ட மாதிரி இருக்கும்... அவ ரியாக்ஷனைப் பார்க்கணும்...."

ஷியாமளி காலிக்கோப்பைகளை டிரேயில் வைத்தாள்.

"சாயந்திரம் துர்க்காதேவியைப் பார்த்து சம்பிரதாயமா அழைக்கப் போகப் போறேன்.... முதல்தடவையா நேர்லே பார்க்கப் போறேன்... தன்னோட வாழ்க்கையை நாடகமாக்க அனுமதி கூட ரங்னேகர் மூலமாகத்தான் ஜெயில்லே இருந்து கொடுத்தா - நீயும் என்னோட வாயேன் ஷியாமளி..."

கோப்பைகளை எடுத்துக் கொண்டு திரும்பிய ஷியாமளி நின்றாள். "இல்லே அண்ணி... சாயந்திரம் அண்ணாவைப் பார்க்கப் போறேன்... நாளைக்கு அவன் பிறந்தநாள் ஆச்சே... போன வருடம் பர்த்டேக்கு எல்லோரும் சேர்ந்து இருந்தோம்.... இப்போ...." வார்த்தையை முடிக்காமல் நடக்கும் ஷியாமளி...

சுபா டிரஸ்ஸிங் டேபிள் மேல் கல்யாணப் புகைப்படத்தில் சிரிக்கும் ரத்தனையே பார்த்தபடி இருந்தாள்.

எல்லாமே கனவு போல இருக்கிறது—

"கொலாபாவிலே வரப் போற பலமாடிக் கட்டடத்தோட வரைபடம் இது.... நான்தான் ஆர்க்கிடெக்ட்... ஒவ்வொரு மாடியிலேயும் விமானக் கம்பெனி அலுவலகம், ஏற்றுமதி நிறுவனம், கம்ப்யூட்டர் சென்டர்னு இடம் பிடிச்சிருக்காங்க... ஒவ்வொருத்தருக்கும் ஒருமாதிரி இண்டீரியர் டெகரேஷன் செய்யணும்... அல்டிமேட் சாலஞ்ச் பார் யுவர் எக்ஸ்பர்டைஸ்.... எடுத்துக்கறீங்களா சுபா?"

தொழில்முறையில் ஐந்து வருடம் முன்



னால் உருவான கூட்டணி அது.

"ரத்தன்... ங்க மராத்தியிலே நாடக ஆசிரியர்னு கேள்விப்பட்டேன்... நடிகர் கூடவாம்... நாடகக் குழு ஆரம்பிச்சிருக்கிறதா நம்பியார் சொன்னார்..."

ஒரு பகல் நேரத்தில், கொலாபாவிலிருந்து காரில் திரும்பும்போது சுபா கேட்டாள்.

"மராத்தி இல்லே சுபா... கொங்கணி... ஸ்கிரிப்டை இந்தியிலே எழுதுவேன்.... நடிகர்களை இங்கிலீஷ்லே டைரக்ட் செய்வேன்... பார்க்க வர நாலு பேரும் மதராஸி விமர்சகரா இருப்பாங்க..."

சிரிப்பிலும், அப்புறம் அவன் வாழ்க்கையிலும் இணை சேர்ந்த சுபா....

ஏ.சி. ஓரில்லுக்கு நேர் மேலே சுவரில் அழகாக விரிந்த பல்லக்கின் வண்ணப் படத்தில் சுபாவின் பார்வை படிந்தது. ரத்தன் தியேட்டர்ஸ், கிரிஷ் கர்னாடின் 'ஹய வதனா'வைக் கொங்கணியில் மேடையேற்றியபோது, மேடை அலங்காரத்தை சுபா எடுத்துக் கொண்டதன் முதல் வெளிப்பாடு...

"சாதாரண புரோசீனியம் மேடை அமைப்பிலும் ஒரு மாந்திரீகம் கலந்த சூழலை, பல்லக்கை மட்டும் வைத்து சுபா எழுப்பியிருக்கிறார்....."

நினைவில் நிற்கும் பத்திரிகை விமர்சன வரிகள்.

பல்லக்கின் இடதுஓரமாக சுபாவின் பார்வை நகர்ந்தது. வெள்ளீர் போட வேம்பாவும். மெழுகிய தரையும். தரையில் சாப்பாட்டுத் தட்டுக்களுமாக ஒரு புராதன கிராம வீடு. ஓரமாகக் கயிற்றுக் கட்டிலில், வயதான பெண்மணியாக, எங்கோ வெறித்தபடி.... சுபாதான் அது.... அழகான செப்பியாடோன் புகைப்படம்.

மகேஷ் எல்குஞ்ச்வாரின் 'வாதே சிராபந்தி' நாடகம் அது. மராத்திய கிராம வீட்டைக் கண்முன் கொண்டு நிறுத்துவதோடு மட்டும் சுபாவின் பங்கு முடியவில்லை... காலபோதம் இல்லாமல், சூழ்நிலை குழம்பிப்போய், கட்டிலிலேயே உட்கார்ந்து அரற்றும் வயதான பெண்ணை மேடையில் அவள் தத்ரூபமாகச் சித்திரித்ததைப் பிரபல நாடக ஆசிரியர் விஜய் டெண்டுல்கர் பாராட்டிப் போன இனிமையான நினைவுகள்....

"அண்ணி... நான் காலேஜுக்குக் கிளம்பறேன்...."

ஷியாமளியின் குரல் சுபாவை மெல்ல உலுக்கி அசைத்தது.

"உங்களுக்குக்காக பிரட் ஆம்லெட் ஹாட் பாக்கிலே மூடி வச்சிருக்கேன்.... பிளாஸ்க்கிலே டீ இருக்கு... வரட்டுமா?....."

தோளில் ஆதரவாகத் தட்டிப் போகும் ஷியாமளி....

எந்தக் கோர்ட்டும் ரத்து செய்ய முடியாத உறவு இது.....

**நா**ரிமன்டவர் பதினேழாவது மாடியில் 'சுபா டெகார்' அலுவலகத்துக்குள் நுழைந்தபோது ஊழியர்கள் அவள் கேபினையே பார்த்தபடி வணக்கம் சொன்னார்கள்.

உன்னே யார்? பஹ்ரினில் ஐந்து நட்சத்திர ஓட்டலில் இன்டீரியர் டெகரேஷன் செய்வது பற்றிப் பேச வருவதாகச் சொன்ன அரபிகளா? நாளைக்குத்தானே?

"குட்மார்னிங் மேடம்..."

ரத்தன்.

சந்தோஷமும், துக்கமும் மாறி மாறிப் பொங்கிவர சுபா கையை நீட்டினாள்.

"ரொம்ப நேரமாக் காத்துக்கிட்டிருக்கீங்களா?"

"சுபா டெகார் எம்.டிக்காக, என் பிரிய மனைவி... ஜமின் மாஜி மனைவிக்காக ஒரு சின்னக் காத்திருப்பு..."

மாஜி மனைவி. சுபா உதடுவரை வந்த வசவைக் கஷ்டப்பட்டு விழுங்கினாள். "துர்க்கா நாடகத்துக்கு நல்ல வரவேற்பாமே... ரத்தன் தியேட்டரின் பெயரைக் காப்பாற்றி விட்டார்கள் என்று அல்காஸி ஃபோன் செய்து சொன்னார்...."

ரத்தன் சிரித்தபடி புகைக்குழாயைப் பற்ற வைத்தான்.

"உங்கள் பெயரை மிக கவனமாகவே உபயோகிப்பேன்..."

சுபா தலை முடியை இரண்டு கைவிரலா

> **"அம்மா! நானும் பலபேரைப் பாத்துட்டேன். ஒரு நிமிஷத்துல புடைவை செலக்ட் செஞ்ச ஒரே ஆள் நீங்கதாம்மா!"**
>
> **"சும்மாயிருப்பா! இது எனக்கில்ல, எங்க மாமியாருக்கு!"**
>
> **— அ. குருசங்கர்**

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

**FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS**

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604



ஹும் ஆழமாகக் கோதியபடி பேசினான். துர்க்காதேவியின் மேனரிஸம் இது.

''பிசினஸ் பேசலாமா?''

ரத்தன் சுபாவைத் தீர்க்கமாகப் பார்த்தான்.

"சொல்லுங்க..."

"பேக் பே ஏரியாவிலே மோத்தி டவர் அசைன்மெண்ட்... சுபா டெகார்தான் இன்டீரியர் டெகரேஷன் செய்யணும்னு பில்டிங் புரமோட்டர்கள் விருப்பப் படறாங்க.. என்னோட விருப்பமும் அதே... சப் காண்ட்ராக்டரா கவோ, இல்லே..."

''நான் தனியாகவே வேலை பார்க்க விரும்பறேன்...."

சுபா உறுதியாகச் சொன்னாள்.

**"அந்த ஆபீஸ்ல லஞ்சப் புழக்கம் அதிகமா இருக்குன்னு எப்படி சொல்றீங்க?"**

**"புதுசா வந்த மானேஜரை வரவேற்க நோட்டு மாலை போடுறாங்களே!"**

**— பிரசன்னகுமார்**

''யுவர் விஷ் மேடம்... தனியாத்தான் நிப்பேன்னு நீங்க முடிவு செய்தா குறுக்கே நிற்க நான் யார்?''

நிற்கவில்லைதான். பிணங்கிப் போய் ஒரே கூரைக்குக் கீழே இருப்பதைவிட, பிரிந்து போய்ப் பரஸ்பர மரியாதையோடு சுவாசிப்பது மேலானது என்று சுபா சொன்ன போதும் அவன் இதையேதான் சொன்னான்.. அது ஒரு வருடம் முன்பு....

ரத்தன் கிளம்பத் தயாராக எழுந்து நின்றான். "எப்படி இருக்கா என் குட்டித் தங்கை? அண்ணாவைவிட அண்ணிதானே உசிரு?"

ரத்தன் கண்ணைச் சிமிட்டினான்.

"நாளைக்கு உங்க பிறந்தநாள் ஆச்சே.. பரிசோடு சாயந்திரம் பார்க்க வருவாள்...."

போன வருடம் பிறந்தநாள் நினைவில் இரண்டு பேரும் மவுனமானார்கள்.

ஷியாமளி மங்களூரிலிருந்து வந்த அந்த நாள் அது. பிறந்தநாள் பரிசாக சுபா ஷேக்ஸ்பியர் நாடகங்களின் மல்ட்டி-மீடியா சிடியைக் கொடுத்தான். அப்போது,

"நானும் உனக்கு ஒரு பதில் பரிசு தர்றேன்.."

ரத்தன் கொடுத்த அந்த மறுபரிசு... அதில் தான் எல்லாம் ஆரம்பமானது....

'சிறைப்பறவை' என்ற பெயரில், மராத்திய கிராமப் பெண் ஒருத்தியின் நிஜ வாழ்க்கையை மையமாக வைத்து எழுதப்பட்ட புத்தகம் அது.

''இந்த துர்க்காதேவி ரொம்ப இன்டரெஸ்டிங் கேரக்டர்.. கட்டின புருஷனும், அவனோட கூடப் பிறந்த அண்ணனும், தம்பியுமே, அவளை ரெட்லைட் ஏரியா புரோக்கருக்கு வித்திருக்காங்க... எத்தனையோ கஷ்டப்பட்டு, எப்படியோ தப்பிச்சு கிராமத்துக்குத் திரும்பி, அத்தனை பேரையும் வெட்டி சாய்ச்சிட்டு ஜெயிலுக்குப் போயிருக்கா... ஆறு வருஷமா உள்ளேதான் இருக்கா.. ஜெயில்லே வச்சே பேட்டி கண்டு எழுதி இருக்காங்க.. படிப்பறிவு இல்லே... முரடுதான்..... ஆனா அவளோட புத்தி நீட்சண்யமும், தீர்க்கமான பார்வையும்... படிச்சுப் பாரு... யூ வில் லைக் ஹர்...."

அசிரத்தையோடு படிக்க ஆரம்பித்தது, புத்தகத்திலே அமிழ்ந்துபோன சுபா....

"போற போக்கிலே நீயே துர்க்காதேவியா அரிவாளோட நிக்கப் போறே..."

ரத்தன் கிண்டல் செய்தான்.

மாறினால் என்ன? மேடையில்.

"பயித்தியமா உனக்கு? துர்க்காதேவி என்ன நாடகத்துக்கான சப்ஜெக்டா? நாம ஸ்டைலைசேஷன், எக்ஸ்பெரிமெண்டல் தியேட்டர் அது இதுன்னு மெனக்கெடற போது திடீர்னு இப்படி ஸ்யூடோ ரியலிஸ்டிக்கா... அரிவாளும் கையுமா... சகிக்காது..."

ரத்தன் தடுக்கத் தடுக்க, சுபா துர்க்காவை நாடகமாக்கினாள். ரங்கேகரோடு அவள் கிராமத்துக்கே நேரே போய் யார் யாரையோ சந்தித்து, துர்க்காவின் நடை, உடை, பாவனைகளை மனதில் இருத்தினாள். சாய்ந்து நடந்துகொண்டு, சரமாரியாக வசவுகளை உதிர்த்துக்கொண்டு... எல்லாம் நாடகத்தில் கொண்டுவர வேண்டிய விஷயங்கள்.

"ஸ்டாப் திஸ் நான்சென்ஸ்... நிறுத்த முடியலேன்னா நான் இறங்கிப் போறேன். இந்தக் கூத்தடிப்பிலே நான் சேர முடியாது..."

கூப்பாடும் வசவும் கலந்த ஒத்திகை நடந்த இரவில் வெளியேறிப் போன ரத்தன்... விவாகரத்தில் முடிந்த அந்த வெளியேற்றம்...

''ஓ கே... நான் கிளம்பறேன்....''

ரத்தனோடுகூட அறை வாசல் வரை நடந்தாள் சுபா.

''புதுசா ஏதாவது நாடகம் எழுதியிருக்

